# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.
1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற் சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப் போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே)
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி
8-00 முதல் 10-00 (இரவு) **ஸர்வதரிசனம்**
10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.
10-30 இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.
8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**
மதியம் : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன
இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன
8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்.**
10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
10-30 இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம் மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.
மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவு மணி முதலியன:
இரவு 8-00 முதல் 10-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**
10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்:
10-30 இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்:
5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)
7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன
8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)
9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன
10-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன;
8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்**
10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
10-30 இரவு : ஏகாந்தசேவை (தனி)



प्रपन्न पारिजाताय तोत्रवैत्रैक पाणये ।
ज्ञानमुद्राय कृष्णाय गीतामृतदुहे नमः ॥

*ப்ரபன்ன பாரிஜாதாய தோத்ரவேத்ரைக பாணயே*
*ஞானமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருததுஹே நம:*

சரணடைந்தவர்களுக்குக் கற்பக விருக்ஷம் போன்றவனும் பசுவை ஓட்டுதற்கு ஒரு கையில் பிரம்பைப் பிடித்திருப்பவனும், கீதை என்னும் அமிர்தத்தைக் கறந்தவனும், கின் முத்திரை தாங்கியிருப்பவனும் ஆகிய கிருஷ்ணனுக்கு நமஸ்காரம்.

*ஸ்ரீ பகவத் கீதை தியான சுலோகம் 3.*

---

**(கீதை ஜெயந்தி 7-12-81 அன்று நாடெங்கும் வெகு விமர்சையாகக் கொண்டாடப்படும்.)**




தனிப்பிரதி ரூ. 1

வருடச் சந்தா ரூ. 12

டிசம்பர் 1981

மலர் 12

இதழ் 7



*சிறப்பாசிரியர் :*

**திரு. பி. வி. ஆர். கே. பிரசாத், I.A.S.,**

செயலாட்சித் தலைவர்,

தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*

**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**

*துணையாசிரியர் :*

**திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

*அச்சிடுபவர் :*

**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**

மேலாளர்,

தி . தி. தேவஸ்தான அச்சகம்,

திருப்பதி.

**முழு விவரங்களுக்கு:**

THE WELFARE OFFICER

Publication Section, T.T.D.

K. T. Road,

TIRUPATI.


## உள்ளுறை

# ஆசிரியர்க்கு....

ஆசிரியர் அவர்களுக்கு, 1981 செப்டம்பர் ஸப்தகிரி இதழ் கண்டேன். மக்களுக்கு மிகவும் பயனுள்ள, பல்வேறு, விசேஷ சிறப்பு அம்சங்களைப் படித்துப் பார்த்து, மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். மிகவும் மலிவான விலையில், (பணத்துக்கு முக்கியத்வம் கொடுக்காமல்) இந்து சமய வளர்ச்சி, ஆன்மீக வளர்ச்சி, இவைகளை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு, சிறப்பான தொண்டு உள்ளத்துடன், ஸப்தகிரி, ஞானகிரியாக உலாவி வருவது கண்டு, உண்மையாகவே என் உள்ளம், பூரிப்பும், பெருமிதமும் அடைகிறது. ஸப்தகிரிக்கும், தங்களுக்கும், எனது இதயம் நிறைந்த பாராட்டுக்கள்.

திருமதி உமாஹரிஹரன் (அலிபி) அவர்களின் 'நவக்ரஹங்கள்', என்ற கட்டுரையிலே, ஒரு பிழை உள்ளது.

இரண்டரை நக்ஷத்திரம் ஒரு ராசி, என எழுதி உள்ளார். ஒரு ராஸிக்கு இரண்டரை நக்ஷத்திரம் என்றால்? பன்னிரெண்டு இராஸிகளுக்கும் முப்பது நக்ஷத்திரம் அல்லவா வரவேண்டும். மொத்தமே நக்ஷத்திரங்கள் 27 மட்டும்தானே. 27 நக்ஷத்திரங்களையும், பன்னிரெண்டு ராசிகளுக்கு பகிர்ந்தால், ஒரு ராசிக்கு இரண்டே கால் நக்ஷத்திரம் தானே வர முடியும். அப்படி இருக்கும்போது ஒரு ராசிக்கு இரண்டரை நக்ஷத்திரம் என்று எப்படி எழுதினர். ஒரு வேளை அவருக்கு புரியாத நிலையா? அல்லது அச்சுப் பிழையா?

எது எப்படி இருந்தாலும், திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழாகிய, ஸப்தகிரியில் இது போன்ற பிழைகள் இடம் பெறுவது, ஒளிமிக்க சூரியனில் ஒரு கரும்புள்ளி இடம் பெற்றது போல உள்ளது என்பதை, மேலான தங்களுடைய கவனத்திற்கு, பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இனி வரும் இதழ்களில் இம் மாதிரி பிழைகள் நேராவண்ணம் கவனிப்பதுடன் மேற்கண்ட பிழை குறித்து, அடுத்து வரும் அக்டோபர் இதழில் பிழைத்திருத்தம், என்ற தலைப்பின் கீழ் விளக்கம் வெளியிட்டால்,இரண்டரை நக்ஷத்திரம்ஒருராசி என்ற வரியைப் படித்த சாஸ்திரம் அறிந்த அனைத்து வாசகர் உள்ளத்திற்கும், திருப்தி ஏற்படும் என்பதையும் தெரிவித்துக் கொண்டு இதனை இத்துடன் நிறைவு செய்கிறேன்.

**யோகி விபூதிபாபா,**
*நமணசமுத்திரம்.*

மதிப்பிற்குரிய ஐயா,

செப்டம்பர் 81 மாதத்திய சப்தகிரி இதழில், "ஸப்தகிரி" தனிப் பிரதியின் விலையினை ரூ. 1-00 ஆக உயர்த்த தி. தி. தே. மேலாண்மை முடிவு செய்துள்ளதாகச் செய்தி வெளியிட்டிருப்பதைக் கண்டேன்.

ஸப்தகிரி இதழின் விலையை உயர்த்துவதை நான் முழு மனதுடன் வரவேற்கிறேன்.

மக்களின் மனதைப் பாழ்படுத்தும், கீழ்த்தரமான எண்ணங்களுக்கு மனதை உறைவிடமாக மாற்றும் மட்டரகமான விஷயங்களை வெளியிடும் பத்திரிகைகள் கூட தனிப் பிரதி ஒரு ரூபாய்க்குக் குறையாமல் விற்பனையாகி வரும் இந்நாளில், ஆன்மீக நெறியில், மக்களின் நல் வாழ்விற்காகப் பல அரிய விஷயங்களை, உயர்ந்த முறையில் அச்சு வடிவமைத்து வெளிவரும் உயர்ந்த நூலான ஸப்தகிரியின் விலையை உயர்த்துவது எவ்விதத்திலும் நியாயமானதேயாகும்.

மேலும், ஸப்தகிரி இதழ்களை, தமிழ்நாட்டில் உள்ள எல்லாப் பள்ளிகளிலும், எல்லாக் கல்லூரிகளிலும், மற்றும் எல்லாப் பொது நூலகங்களிலும் வரவழைத்து, மாணவர்களும், மற்றும் இளைஞர்களும், "ஸப்தகிரி"யைப் படித்துப் பயன் பெற வழிவகைகளைச் செய்வது சாலச் சிறந்தது என்பது என் கருத்து.

**எஸ். கிருஷ்ணன் பி.ஏ ,**
*தருமபுரி.*

ஆசிரியர்க்கு,

ஸப்தகிரி 'காவிரிச் சிறப்பிதழ்' அருமையாகத் தொகுக்கப்பட்டுள்ளது. காவேரிப்பட்டினம் திரு. என். ஆர். ஜெயச்சந்திரன் பி.காம். அவர்கள் எழுதியுள்ள "அன்னை காவிரியின் அருமையும் பெருமையும்" கட்டுரை மூலம் தெரியாத பல விஷயங்களை தெரிந்து கொள்ள முடிந்தது. சிறப்பாக கட்டுரையை எழுதியுள்ள அவருக்கும், காவிரிச் சிறப்பிதழை வெளியிட்டுள்ள உங்களுக்கும் எனது பாராட்டுதல்களை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

**என். சந்திரசேகரன், கிருஷ்ணகிரி.**

## ஆசார்யர்கள் திருநக்ஷத்ர தினங்கள்

10-12-81 — திருமங்கையாழ்வார்
11-12-81 — திருப்பாணாழ்வார்
25-12-81 — தொண்டரடிப் பொடியாழ்வார்.

# என் வாழ்க்கையில்....

ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழக மாணவியாகிய நான் 1974-ம் வருடம் ஜூலை மாதம் நடைபெற்ற பட்டமளிப்பு விழாவில், எம்.ஏ., பொருளாதாரம் பட்டம் பெறும் நோக்கத்துடன் எனது தந்தையாருடன் கோவையிலிருந்து திருப்பதிக்கு வந்திருந்தேன். பட்டமளிப்பு விழா நாளுக்கு முதல் நாள் மாலை, திருமலைக்குச் சென்று, அங்கு ஏற்கெனவே ரிஸர்வ் செய்து வைத்திருந்த காட்டேஜில் தங்கியிருந்தோம். அன்று இரவு 1 மணி அளவில் எழுந்து ஸ்நானம் செய்து முடித்து, இருவரும், பாலாஜியின் சுப்ரபாத தரிசனத்துக்கு, கோவிலை நோக்கிப் புறப்பட்டோம். காலை 2மணி அளவில் கோவில்வாசலை அடைந்த எங்களுக்கு ஏற்பட்ட அதிர்ச்சிக்கு எல்லையே இல்லை. அவ்வளவு கூட்டம்! ஒரு சிலர் மட்டுமே உள்ளே அனுமதிக்கப்பட்டனர். விசாரித்ததில்அவர்கள் ரூ. 25/- நுழைவு டிக்கட் வாங்கி சிறப்பு தரிசனம் செய்ய வந்தவர்கள் எனத் தெரிந்தது. உடனே நாமும் அது போன்று டிக்கட் வாங்கினால்தான் அன்று இறைவனின் தரிசனம் சீக்கிரம் கிடைக்கும் என தீர்மானித்து டிக்கட் கவுண்டரை நோக்கிச் சென்றால்......மீண்டும் ஓர் அதிர்ச்சி!! ஸ்பெஷல் தரிசன டிக்கட், மற்றும் அனைத்து ஸேவா டிக்கட்டுகளும் முதல் நாள் இரவு 8 மணிக்குள் வாங்கியிருக்க வேண்டும் என்ற விபரமே அந்த அதிர்ச்சிக்குக் காரணம். வேறுவழியின்றி, தர்ம தரிசன க்யூவைத் தேடிச் சென்றால் அது வளர்ந்து கொண்டே சென்றது. வெகு தூரம் சென்றபின் ஒருவர் மூலம் தெரிந்த விபரம் மீண்டும் ஓர் அதிர்ச்சியை அளித்தது. க்யூவின் நடுவேயுள்ள இரும்புக் கதவுகள் நிர்மால்ய தரிசனம் ஆரம்பித்த பின்புதான் திறக்கப்படும். அது வரை வெளியே பனியில்தான் நிற்க வேண்டும்.

இந்த விபரம் கேட்ட உடனே, மனம் நிறைந்த வேதனையுடன் "இறைவன் ஏன் இவ்வாறு சோதிக்கிறார் இவ்வளவு சீக்கிரம் வந்தும் இம்முறை தரிசனம் செய்யும் பாக்கியம் நமக்கில்லை. இந்தகூட்டத்தில் நின்று தரிசனம் முடித்து பல்கலைக் கழக பட்டமளிப்பு விழாவுக்குத் தக்க தருணத்தில் செல்வது துர்லபம்," என்று பேசிக்கொண்டே தந்தையும் மகளும் அவ்விடத்தைவிட்டு அகன்று சிறிது தூரம் சென்றோம்.

என்னே அதிசயம்! எதிரில் ஒரு பெரியவர் அப்பொழுது தான் ஸ்நானம் செய்து, திருநாமம் பூண்டு வந்து கொண்டிருந்தார். அவரைக் காணக்காண ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளைக் கண்ட பூரிப்பு தான் ஏற்பட்டது. சிறிது தயக்கத்துடனும், கூடவே சிறிது நம்பிக்கையுடனும் எங்களது கிலேசத்தை அவரிடம் தெரிவித்தோம். சிறிது நேரம் யோசித்த அவர், "இன்றைய கூட்டத்தில் சீக்கிரம் தரிசனம் செய்வது மிகச் சிரமமே. எதற்கும் பார்ப்போம், கலங்காதீர்கள். ஸ்ரீனிவாசன் கைவிட மாட்டான்" என்று கூட்டிச் சென்றார். கோவில்வாயிலை அடைந்து அவர் உள்ளே செல்ல, அவர் பின் சென்று கூட்டத்தினுள் சேர்ந்தோம். பிறகு 45 நிமிடம் கழித்து நாங்கள் கண்ட அந்தப் பெரியவர் தென்பட்டார். அவரைத் தொடர்ந்து மிக்க பிரயாசையுடன் இறைவனின் சந்நிதானத்தை அடைந்தோம். நாங்கள் உள்ளே செல்லவும் திரை நீக்கவும் சரியாக இருந்தது. நாங்கள் தான் முதல் நபர்கள். எங்கள் அஹோ பாக்யம்! – பரந்தாமனின் பெருங்கருணை!! – மனங்குளிர – உளம் நெகிழ இறைவனின் திவ்ய தரிசனம் கண்டு பூரிப்படைந்தோம். எங்களது நிந்தனையையும் ஏற்றுக் கொண்டு, எங்களுக்கு அருள்பாலித்த அந்த பரம்பொருளின் ஸௌலப்யத்தை நினைந்து நினைந்து மன முருகி நின்றோம். இறைவனே எம்மை அழைத்துச் செல்ல அந்தப் பெரியவர் உருவில் வந்தார் போலும்! அந்த சம்பவத்தை நினைக்குந்தோறும் எங்கள் மெய் சிலிர்க்கிறது!!

கு. நாகலக்ஷ்மி
கோயம்பத்தூர்.



## இம்மாதத்திய முக்கிய நாட்கள்

| | | |
|---|---|---|
| 2-12-81 | — | ஸ்ரவண விரதம் |
| 7-12-81 | — | கைசிக ஏகாதசி |
| 8-12-81 | — | கைசிக துவாதசி |
| 11-12-81 | — | திருக்கார்த்திகை, பௌர்ணமி |
| 16-12-81 | — | தனுர் மாசப் பிறப்பு |
| 22-12-81 | — | ஸர்வ ஏகாதசி |
| 25-12-81 | — | போதாயன அமாவாஸ்யை |
| 26-12-81 | — | அமாவாஸ்யை |
| 29-12-81 | — | ஸ்ரவண வ்ரதம் |

# கீதை பரப்பும் பக்தி நெறி

பகவத் கீதையில் ஒரு அற்புத மான பகுதி பக்தி யோகம்.

அர்ச்சுனன் கேட்கிறான்.

"தூயவனாகிய தேவனே! மாய வனே! என் மன்னவனே! பக்தியைப் பற்றி எனக்கு சில வார்த்தைகளைக் கூறு"

பகவான் சொல்கிறார் :

"இதயம் முழுவதையும் எனக்கே உரிமையாக்கி விடு. உன்னுடைய எண்ணங்கள் எல்லாம் என்னையே சாரட்டும். அன்பும், நம்பிக்கையும் கொண்டு என்னைப் பணிபவர்கள் நிச்சயம் என்னால் கரை சேர்க்கப்படு கிறார்கள்."

கடவுள் கடவுள் என்று சொல் கிறோமே அந்தக் கடவுளுக்கு உருவம் இருக்கிறதா இல்லையா என்பதையும் பகவான் ஸ்ரீ கண்ணன் தமது கீதை யிலே தெளிவுபடுத்துகிறார்.

கடவுள் என்றால் எல்லாவற்றை யும் கடந்து நிற்பது. என்றும் நிலை யானது. ஆதியும் அந்தமும் இல்லா தது. ஜோதி வடிவமானது. அதாவது ஒளிமயமானது.

'ஞாலத்து ஒரு பொருள், வானவர் தம் மெய்ப்பொருள்' என்று, இறை வனைக் குறித்து, திருமழிசையாழ் வார் பாடுவது இவ்விடம் நோக்க வேண்டும்.

கீதைக்கும், வேதங்களுக்கும் சார மாய் நிற்பது ஆழ்வார்களின் பாசு ரங்கள். எப்பொருளிலும் 'ஒளி மய மானவனாக' நான் இருப்பேன் என் பது, பகவான் வாக்கு.

"அண்டமாய் எண்திசைக்கும்
ஆதியாய் நீதியான
பண்டமாம் பரம சோதி"

என்று பாடுகிறார் திருமங்கையாழ் வார்.

கீதையின் சாரமாகவே, நாலா யிர திவ்வியப் பிரபந்தம் இருக் கிறது என்பதில், இது ஒரு சோறு! பானை சோறு பதம் பார்க்க, ஒரு சோறு போறாதா, என்ன?

அவன் சொல்லவும் முடியாதவன். வாக்கினால் அவனை வணங்கி ஆறுதல் அடைய முடியுமே தவிர, என்ன தான் புலமை மிக்கவனாக இருந் தாலும், அந்த பரம ஜோதியை அளந்துவிட முடியாது.

---

திரு. பாரதிநாதன்-புவனகிரி.

---

அதனால்தான் சொல்லவும் முடி யாச் சுடரொளி வடிவாய் நான் இருக் கிறேன் என்று தன் நிலையை கீதை யில் தெளிவுபடுத்தினார்.

நரனான அர்ச்சுனனுக்கு, நாரா யணனான நீ கண்ணன் விஸ்வரூப தரி சனம் அளிக்கிறார்.

வகை வகையான வடிவங்கள்! எத் தனையோ வண்ணங்கள்! பற்பல உரு வங்கள்! கோள்கள்! சூரியன்கள்! நக்ஷத்திர மண்டலங்கள்! மூவர்கள்! தேவர்கள்! உலகத்தின் ஜீவன்கள்!

விஸ்வரூபம் முடிவு பெற்றதா என்றால் இல்லை. முடிவில்லாத தன் மைக்கு வளர்ந்து கொண்டே போவ தைக் கண்ட அர்ச்சுனன், "கண்ணா! உன் பேரெழிலை, பிரம்மாண்ட வடிவை, என்னால் பார்க்க இயல வில்லை. எத்தனை வேதம் கற்றறிந் தாலும், எத்தனை வேள்விகள் நடத் தினாலும், தானம், தருமம், தவம் என்று ஏராளமாகப் புரிந்தாலும் உன்னுடைய விஸ்வரூபத்தை உன் னால் தவிர வேறொருவரால் பார்க்க இயலாது" என்கிறான்.

ஆதியும் அந்தமும் இல்லாதவன் என்பதை விளக்கவே இந்நிகழ்ச்சி இவ்விடம் சொல்லப்பட்டது.

மனத்தைச் செலுத்தக் கூடிய ஐம் படைகளையும் மூன்று குணங்களையும் வென்றால், அவர்கள் மட்டுமே அவனை அடைய முடியும். அதிலும் ஒரு விதி இருக்கிறது. சுயநலத்தை உத்தேசித்து அவனை அடைந்துவிட முடியாது.

உருவமில்லாததோர் ஒளி வடிவம் என்று பகவானே தன்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ளும்போது குழலூ தும் கண்ணனும், லிங்கமும், இன்ன பிற இறை உருவங்களும் எதற்கு என்ற கேள்வி எழலாம்.

கீதையைப் பொறுத்தவரை, அந் நூலைப் பற்றி எந்தவொரு இடத்தி லும் எழும் சந்தேகங்களுக்கும், அந் நூலிலேயே விடையும் இருக்கிறது.

குரு, சிஷ்ய பாவமாக, பரமாத்மா ஜீவாத்மா உரையாடல்களாக கீதை அமைக்கப்பட்டதன் நோக்கமே அப் போதைக்கப்போதே ஐயங்கள் நீக் கப்பட வேண்டுமென்பதுதான்!

பொதுவாக,

நாமெல்லாம் சாதாரண மனிதர் கள்.

உருவமில்லாததோர் ஒளியை அறிந்துணரும்,ஆற்றலோ மனப்பக்கு வமோ இன்னும் நமக்கு ஏற்பட வில்லை. வெகு சிரமத்திற்கும், பயிற் சிக்கும் பிறகே அந்நிலை சித்திக்கும்.

பாவித்தல் என்பது மனத்திற்கு அளிக்கப்படும் ஒருவகைப் பயிற்சி.

சிறு குழந்தையை பயமுறுத்து வதற்காக பேய் பிசாசு என்றெல்

,ல்லி அதற்கு ஒரு உருவ ,பித்து விடுவதால் என்ன ு? அந்த உருவம் அழிக்க முடியாதபடி அதனுள் படிந்து விடுகிறது. இல்லையா!

ஆகவேதான் நமது சான்றோர்களும், பெரியோர்களும், மனோ தத்துவ ரீதியாக இறை வழிபாடு இருக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு, சிலைகளையும் விக்கிரகங்களையும் சாதாரண மக்களின் எளிமையான வழிபாட்டிற்காகக் கற்பித்து வைத்திருக்கின்றனர்.

முருகன் என்றதும்,

வேலும், சேவற்கொடியும், மயிலும், வள்ளி தெய்வானையும் சட்டென்று படம் பிடித்தாற் போல் நினைவுக்கு வந்து விடுகிறது.

கற்பித்த உருவம் மிக அழுத்தமாக நமது மனதில் பதிந்துவிட்டது.

திருமால் என்றால்

சங்கு சக்கரம் கதையுடன் இரு தேவி சமேதராக இருக்கும் அழகிய வடிவம் படம் பிடித்தாற்போல் வந்து விடுகிறது.

"வடிவமில்லாத வழிபாடு கடினம் என்பதால் எல்லா நிலையும் எனக்கே ஆக்கி எந்த உருவில் என்னை வேண்டி வழிபட்டாலும், அவ்வுருவில் நான் இருக்கிறேன்" என்பது ஸ்ரீ கண்ணனின் வாக்கு மூலம்.

எளிமையுடன் மனத்தை இருத்தி வழிபடுவதற்காகவே உருவங்கள் இறைவனுக்கு கற்பிக்கப்பட்டிருக்கின்றன! என்பது இதனால் தெளிவாகிறதல்லவா!

தொடர்ந்து மேலே போவோம்.

பக்தியோகத்தால் என்ன லாபம்?

முத்தி கிடைக்கும் என்பதை அழகாகச் சொல்கிறார் ஸ்ரீ கிருஷ்ணன்.

'என்னுடன் இருந்து என்னுடன் கலந்து என்னுள் நிறைந்த எவரையும் நானே ஜனனம் மரணம் சம்சாரம் எனும் கடலைக் கடந்து கரை சேர்த்திடுவேன்.''

இதனை இன்னும் அழகாக திருமங்கையாழ்வார் சொல்கிறார். "மறுமைக்கு மருந்தினை.''

மறுமை என்பது ஒரு நோயானால் அதனைத் தவிர்க்கும் மருந்து அவன் என்பதே இதன் பொருள்.

அவனையே நினைத்து, அவனையே சதம் என்று நம்பி உறுதியாக வழிபடுபவன் முடிவில் அவனாகவே ஆகி விடுகிறான். அதாவது ஜீவாத்மா அங்கே பரமாத்மா என்ற கடலோடு சங்கமமாகி விடுகிற அமரத்துவ நிலை அது!

'' என்பால் மனம் வைப்பவன் முடிவில்
நானாகவே ஆகிவிடுகிறான்''

என்கிறது கீதை.

நம்முடைய உள்ளத்தால், அவனை நினைக்க நினைக்க, அவன் கொஞ்சம் கொஞ்சமாக தோன்றுகிறான் என்பதை திருமங்கையாழ்வார், அற்புதமாகப் பாடுகிறார்.

'' **களங்கனி வண்ணா!**
**கண்ணனே! என்தன்**
**கார்முகிலே! என நினைந்து''**

நினைந்தால்? பிறகு?

'' **நினைந்து உளம்கனிந்து இருக்கும்**
**அடியவர் தங்கள்**
**உள்ளத்துள் ஊறும்...''**

உருக வேண்டும். அவனுடைய உருவம் மனதில் பதிய வேண்டுமென்றால் அவனையே நினைத்து கண்ணீர் பெருக வேண்டும். காதலாகி கசிய வேண்டும். மன்றாட வேண்டும். ஒப்புக்கு நம்பிக்கையில்லாமல் வழிபடுவதால் எந்தப் பயனும் இல்லை.

உறுதியான வழிபாடு எடுத்த எடுப்பிலே சாமான்யனுக்குச் சாத்தியமில்லை. என்ன செய்வது? கீதை கொஞ்சம் சலுகை தருகிறது. உறுதியான சாதனை செய்வது சிரம

---

# பிரபந்த நாயகன்!

**திரு. இரா. இளங்கோதாசன்-சித்தூர்.**

நாலாயிரம் என்னும் திவ்ய பிரபந்தம்
நாராயணா! உந்தன் புகழ்பாடும்!—எந்த
நூலாயிரம் கோடி மற்றவை யாயினும்
நிம்மதி நான் பெற ஈடாகும்?—நாலா ||

பா சுரக்கும் அருட் பாசுரங்கள் சொல்லும்
பரந்தாமா! உந்தன் திருநாமம்!—இந்த
பாசமிகும் பேதை ஒருவனின் நாவுக்கு
பாலமுதம் அதுவே தரலாகும்!—நாலா ||

வில்லி புத்தூருறை ஆழ்வார் புனைந்தது
வனமாலி! உந்தன் வடிவாகும்!—அது
நல்லவர் யாவரும் போற்றிப் பயின்றிட
நானிலத்தில் ஏது வேறாகும்?—நாலா ||

கவிஞரில் மாமன்னன் கம்பர் புனைந்தது
கேசவனே! உந்தன் கலையாகும்!—இந்த
புவியினில் அதுபோல் வேறொரு காவியம்
புனைந்தாலும் ஏது நிலையாகும்?—நாலா ||

திருவருள் வழிந்திடும் திருமலை என்றாலே
திருமாலே! அதுவே உனதாகும்!—எந்த
பெருவருள் ஆயினும் அதிலே இருப்பதை
பாரினில் யாரே தரலாகும்?—நாலா ||

மாயிருக்கலாம். அப்படியானால், எளிமையாக ஒரு வழி சொல்கிறேன். நல்ல புத்தகங்கள் தெய்வீகமான புத்தகங்களைப்படி. அதனால் உன் மனம் தெளிவுபடும். மெய்ப்பொருளைப் பற்றி உரையாற்றும் வியாக்கினங்களைத் தவறாது கேள். அதனால் உன் மனம் பக்குவப்படும். தினசரி வழிபாட்டினையும், பயிற்சியாக்கிக் கொள். நாளடைவில் நீயாகவே அதன் மகிமையைப் புரிந்து கொள்வாய். நாள், நட்சத்திரத்தைப் பார்க்காமல் இப்போதே பயிற்சியைத் தொடங்கு''.

''நாத் தழும்பெழ நாரணா! என்று
அழைத்து மெய்தழும்பத் தொழுது
ஏத்தி''

என்பது குலசேகர ஆழ்வார் வாக்கு!

நாத் தழும்பெழ வேண்டுமாம். எத்தனை கால பயிற்சி இருந்தால் இது சாத்தியமாகும்!

ஏதாவது ஒரு வகையில் தெய்வீகக் காரியங்களோடு நாம் சம்மந்தப்பட்டிருக்க வேண்டும்.

உழைப்பதும், உழைத்த களைப்பு தீர உறங்குவதுமே வாழ்க்கையாகி விட்டவனுக்கு இந்த அனுஷ்டானங்கள் இயலாதே! என்று கேட்பதற்கு முன் பகவானே பதில் சொல்லி விடுகிறார்.

''அப்படியானால் கவலை இல்லை. என்பொருட்டே தொழில் புரிவதாக நினைத்துக் கொள். என்னையே நினைத்து அன்றாட அலுவல்களைச் செய். செய்த செயல்களின் பலனில் மட்டும் மனசை வைத்து விடாதே. எச்சரிக்கை. கருமத்தின் பலனுக்கு நானே பொறுப்பாளியாவதால் உன் செயல்களை முடிவில் எனக்கே சமர்ப்பணம் செய்து விடு. இதாவது முடியுமல்லவா?''

பயிற்சியிலேயே ஞானம் சிறந்தது.
ஞானத்தைவிட தியானம் சிறந்தது.
தியானத்தை விட தியாகம் சிறந்தது.

மனைவி, மக்கள், உற்றார், சுற்றருக்காக தன் நலன்களை துறப்பது கூட தியாகம்தான். ஆனால் இதில் கவனம் தேவை. ரொம்பப் பேர் இந்த விஷயத்தில் சுயநலத்தையே தியாகம் என்று நினைத்துக் கொள்கிறார்கள். இது அறியாமை. தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்ளும் அவலநிலை.

நுணுக்கமான வேறுபாட்டினை அறிய வேண்டும்.

எல்லோரும் தனக்கு அனுசரணையாக இருக்க வேண்டும் மனைவி, குழந்தைகள் தனக்குச் சார்பாக-தனக்கு கட்டுப்பட்டு தன் விருப்பப்படி நடக்க வேண்டும் என்று எண்ணும்போது அங்கே தியாக உணர்வு குழிதோண்டிப் புதைக்கப்படுகிறது. கலப்படமற்ற சுயநலமே தலைதூக்கி நிற்கிறது.

பிறருக்காக வாழ்வதாகச் சொல்லிக்கொண்டு தனக்காகவேதான் எல்லோரும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

மகாத்மா காந்திஜி, கஸ்தூரிபாயை சிதையில் வைத்துவிட்டு, வெகுநேரம் அருகிலேயே உட்கார்ந்திருந்ததைக் கண்ட நண்பர் ஒருவர், 'மகாத்மாஜி! ஏன் இங்கேயே உட்கார்ந்திருக்கிறீர்கள்?' என்று கேட்டார். அதற்கு மகாத்மாஜி என்ன பதில் சொன்னார் தெரியுமா?

''என்னோடு இவ்வளவு ஆண்டுகள் உயிருக்கு உயிராக வாழ்ந்தவளாயிற்றே கஸ்தூரிபா! அவளுக்காக ஒருசில மணி நேரம் சிதையினருகில் உட்கார்ந்தால் என்ன?'' என்று கேட்டார்.

சுயநலம் தியாகம் இரண்டிற்குமுள்ள வேற்றுமை தெளிவாகப் புரிவதற்காக இவைகளைச் சொன்னேன்.

ஆக, பக்தியில் சிறந்தது தியாகம்.

சரி.

பக்திக்கு என்னென்ன லட்சணம்!

எல்லா உயிர்களையும் உள்ளன்போடு
நோக்குவது—

விழிகளில் எப்போதும் கருணையுடன்
இருப்பது—

அகந்தையும் ஆணவமும் இல்லா
மலிருப்பது—

பக்தி செய்பவனுக்கு ஆத்திரம் வரக்
கூடாது.

நாயைக் கல்லாலடிப்பவனும், பசுமாட்டை 'மாங்கு, மாங்கு' என்று சாட்டையால் விளாசுபவனும், பக்திக்கு முன் நிராகரிக்கப்படுகிறான்.

அப்புறம்,

இன்பம் துன்பம் என்று இரண்டு நிலை இருக்கிறது.

இன்பம் வந்தால் சந்தோஷப்படு
கிறோம்.

துன்பம் வந்தால் துக்கப்படுகிறோம்.

''இன்பத்தை ஆரவாரமின்றி அடக்கத்தோடு ஏற்றுக் கொள். கர்வம் உச்சந்தலைக்கு ஏறாமல் பார்த்துக் கொள். துன்பத்தைக் கண்டு வருந்தாதே. துன்பத்தைத் தாங்கிக் கொள். இடும்பைக்கும் இடும்பை செய். அந்தப் பயிற்சியை இறைவனை சரணடைவதால் எளிதாகப் பெறலாம்.''

இன்னொரு இடத்திலே பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் சொல்கிறார்.

''மனிதனே! முகத்தை உம்மென்று வைத்துக் கொள்ளாதே. இதழிலே புன்னகையைத் தவழவிடு. கோபத்தோடும் அளவில்லா துக்கத்தோடும், அச்சத்தோடும் இறைவனை நினைக்காதே. அதற்குமுன் உனக்கு நீயே சமாதானப்படுத்தி மனதை அமைதியாக்கிக் கொள்.''

''அச்சம் கோபம் ஆனந்தம் என்னும் மனத்தின் கிளர்ச்சியை மறந்து வாழ்பவன் என்னரும் நேயன் எனக்கவன் சோழன்,'' என்பதும் அவர் தம் திருவாக்கு.

மனதிலே எப்போதும் சமநிலை வேண்டும்.

அமைதி வேண்டும்.

அமைதியும் தெளிவும் உள்ள இடத்தில்தான் அன்பும், கருணையும் இருக்கும். பக்தியை பயிர் செய்வதற்கு அம்மாதிரியான மனமே ஏற்ற நிலமாகும்.

இந்த விஷயங்களையெல்லாம் விரிவாகச் சொல்வது கீதையின் ''பக்தி யோகம்'' என்கிற பன்னிரண்டாவது பகுதி!



# திருமாலின் திரு அவதாரங்கள்

புலவர். மா. சீதாராமன் M.A., B.Ed.
பெருங்கட்டூர்.

## தீராத விளையாட்டுப் பிள்ளை !

வண்ண மால் வரையே குடையாக மாரி
காத்தவனே! மதுசூதனே!
கண்ணனே! கரிகோள் விடுத்தானே!
காரணா! களிறு அட்டபிரானே!
எண்ணுவார் இடரைக் களைவானே!
ஏத்தரும் பெருங் கீர்த்தியி னானே!
நண்ணிநான்உனை நாள்தொறும்
ஏத்தும் நன்மையே அருள்செய்
எம்பிரானே!

(பெரியாழ்வார் திருமொழி)

கண்ணன் தீராத விளையாட்டுப் பிள்ளை. அவன் செயல்கள் அனைத்தும் விளையாட்டே! நமக்கோ அவன் செயல்கள் வியப்பை ஊட்டவல்லன! நமக்கு அரியனவாகக் காணப்படும்



செயல்கள் எல்லாம் அவனுக்கு எளியனவாகக் காணப்படுகின்றன. அவன் புரிந்த லீலைகளுக்கு அளவேயில்லை. இனி, அவன் லீலைகளுள் சிலவற்றைக் காண்போம்.

தொட்டிலில் உறங்கிக் கிடந்த கண்ணனைத் தொட்டுத் தூக்கினாள் பூதகி! மலர் மாலையைத் தன் மடி மீது கிடத்திக் கொள்வது போல, கண்ணனைத் தன் மடி மீது கிடத்திக் கொண்டாள். நஞ்சு கலந்த முலைப் பாலைக் கண்ணனுக்கு ஊட்டினாள். கண்ணனும் பூதகியின் முலைப் பாலைச் சுவைத்து உண்ணும் பாவனையில், அவள் உயிரையே உறிஞ்சி விட்டான்! வேரோடு மரம் சாய்வது போல, பூதகி நிலத்தில் வீழ்ந்து மாய்ந்தாள். பூதகி வீழ்ந்த பேரிரைச்சலைக் கேட்டு யசோதையும், நந்தகோபனும் ஓடி வந்தனர். 'குழந்தைக்கு என்ன ஆயிற்றோ' என்று துடிதுடித்துப் போயினர். ஆனால், கண்ணனோ அவர்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தான்!

மலைபோல் கிடந்தாள் பூதனை! கோகுலத்தார் பூதனையின் உடலை வெட்டிப் புதைத்தனர். பூதனையோ பொன்னுலகே சேர்ந்தாள்! கண்ணனின் கரம்பட்டதன் பயன் இது!

'குழந்தைக்கு ஏதும் நேர்ந்து விடக்கூடாதே!' என்று யசோதை கண்ணனுக்குத் திருஷ்டி சுற்றிப் போட்டாள். கண்ணனின் வல்லமையை அவள் அறிவாளா! பெற்ற நெஞ்சமல்லவா அது!

கண்ணன் பிறந்து மூன்று மாதங்களாயின. நந்தகோபன் மனையில் சகடம் ஒன்று இருந்தது. அவ்வண்டிக்குக் கீழே தொட்டிலைக் கட்டி அதில் குழந்தையைப் படுக்க வைத்தாள் யசோதை. பின்னர், நீராடும் பொருட்டு யமுனைக்குச் சென்றாள்.

கண்ணனாகிய குழந்தையை ஆராய்ந்து கொல்லும் பொருட்டுக் கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களுள் ஒருவன் அச்சகடத்துக்குள் பிரவேசித்தான். அவன் பெயர் திருணாவர்த்தன் என்பது. வாதாச்சுரன் என்று வேறு பெயரும் அவனுக்குண்டு. கண்ணனைக் கொல்லக் காலம் பார்த்திருந்தான் அசுரன்! இதனையுணர்ந்துகொண்ட கண்ணன் அழுகின்ற பாவனையில் காலை உதைத்துக் கொண்டான். உதைத்த உதை சகடத்தை உருட்டியது. உதையின் வலிமை தாளாத சகடாசுரன் உயிரிழந்தான்.

கண்ணன் தளர்நடை பயிலும் பருவத்தையடைந்தான். கன்றுக்குட்டிகளின் வாலைப்பற்றிக் கொண்டே நடக்கக் கற்றுக் கொண்டான். அடியெடுத்து வைத்து நடக்கத் தொடங்கியது ஆய்ச்சியர்க்குத் தொல்லையாகப் போய் விட்டது. வெண்ணெயையும் தயிரையும் ஆய்ச்சியர் அறியாவண்ணம் திருடி உண்ண ஆரம்பித்தான். எட்டாத உயரத்தில் இருக்கும் பானையைக் கல்லால் அடிப்பான். பானை உடைந்து வெண்ணெய் ஒழுகும். தலையை நிமிர்த்தி, வாயைத் திறந்து ஒழுகும் வெண்ணெயை உண்டுவிட்டு யாருமறியா வண்ணம் ஓடிவிடுவான். கண்ணனின் செயல்களைப் பொறுக்க முடியாமல் ஆய்ச்சியர் யசோதையிடம் புகார் செய்வர். ஆனால், யசோதையோ இவற்றையெல்லாம் கேட்டு உள்ளுக்குள்ளேயே சிரித்துக்கொள்வார்.

ஒருநாள், கண்ணன் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தான். மண்ணை வாரி வாரியுண்டான். இதனைக்கண்ட ஆய்ச்சியர் யசோதையிடம் வந்து கூறினர். இதனைக் கேட்ட யசோதை கையில் சிறு பிரம்பொன்றை எடுத்துச் சென்றாள்.

(41-ம் பக்கம் பார்க்க)

"கோதை தமிழ்' எனக் குவலயம் கொண்டாடும் சிறப்பு மிக்கது திருப்பாவை. முப்பதே பாசுரங்கள் கொண்டது. ஆயினும் மார்கழி மாதத்தின் ஒவ்வொரு நாளையும் திருநாளாகப் போற்றும் வன்மை மிக்கது. இதனை அருளிச் செய்தவள் ஆடிப்பூர அழகுத் தெய்வமாம் ஆண்டாள் ஆவாள்.

அவள் தம் ஈர நாவால் பாடப்பெற்ற மற்றொன்று 'நாச்சியார் திருமொழி.' கண்ணன் என்னும் கருந்தெய்வக் காட்சி காண வழி கோலுவது; ஒரு நூற்று நாற்பத்து மூன்று பாசுரங்கள் கொண்டது. இத்திருமொழி ஞானபக்தி வைராக்கியத்தை ஏற்படுத்த வல்லது.

லினின்றும் வந்த மரூஉச் சொல். நாயகன் என்னும் சொல்லிற்குப் பெண்பாற் சொல் நாச்சியார் என்பர்.

ஆனல் நாச்சியார் என்பதற்கான ஆண்பாற்சொல் நாயனர் என்பதே. திருநெல்வேலி மாவட்டத்தில் நாயனரே-நாச்சியாரே என வழங்கப்படுகிறது. எனவே நாயகன் என்பதற்கான பெண்பாற்சொல் நாயகி என்பதே.

'நயம்' என்ற சொல் மகர, னகரப் போலியால் 'நயன்' என்ருகி, 'ஆர்' விகுதி பெற்று 'நயனர்' என்ருயிற்று. பின்பு முதலெழுத்து நீண்டு நாயனர் என நின்றது.

நாயனர் என்ற தமிழ்ச் சொல்லுக்கு அமைந்த பெண்பாற் பொருளுடனும் திருக்குறளில் கையாளப்பட்டுள்ளது.

மேலும் மிகுந்த விருப்பமுடைய வளை 'நச்சி' என்பர். 'இவள் ஒரு நச்சித்தினி' என்ற வழக்கும் உளது. அதாவது தின்கின்ற பொருட்களில் மிகவும் விருப்பமுடையவள் என்பதாகும்.

இவ்வாறு நச்சு, நச்சுதல் எனத் தொழிற் பெயராய், நச்சு என்னும் விகுதி நீண்டு நாச்சு எனவாகி, ஆர் பிகுதி சேர்ந்த காலை, 'நாச்சு + ஆர் = நாச்சியார்' எனவாயிற்று. எனவே நாச்சியார் என்னும் சொல் மிகவும் விருப்பமுடையவள் எனப் பொருள் படும்.

# கோதையின் தியானம்

**பல்பதியம்**

இத் திருமொழியினைத் திருப்பாவைத் தனியன் 'பல்பதியம்' என்று குறிப்பிக்கும்.

அன்ன வயற்புதுவை ஆண்டாள் அரங்கற்குப்
பன்னுதிருப்பாவைபல்பதியம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு

ஆண்டாள் அன்னங்கள் விளையாடும் வயல் வளமிக்க புதுவையாம் திருவல்லி புத்தூரிலே அவதரித்தாள். மயர்வற மதிநலம் அருளப் பெற்ற அடியார்களுள் மன்னுபுகழ் அரங்கற்குப் பாமாலையன்றிப் பூமாலையும் சூட்டிக் கொடுத்தாள்.

அவளது பாமாலைகள் பன்னு (ஆராய்ந்து செய்யப்பட்ட) திருப்பாவையும், பல பதிகங்களாக விளங்கும் நாச்சியார் திருமொழியும் ஆகும்.

**நாச்சியார்-சொல்லாராய்ச்சி:**

ஆண்டாளை நாச்சியார் எனவழைக்கின்ருேம்.

நாச்சியார் என்னும் சொல் நாய்ச்சியார் என்னும் சொல் சொல்லே நாய்ச்சியார். பேயன்-பேய்ச்சி; ஆயன் - ஆய்ச்சி என்ற சொற்கள் பேயனர் - பேய்ச்சியார்; ஆயனர் - ஆய்ச்சியார் என வழங்கப் பெறும். அது போன்றே நாயனர் - நாய்ச்சியார் அமைந்துள்ளது.

**பொருள் வளர்ச்சி:**

நயம், நசை, இருசொற்களும் விருப்பம் என்னும் பொருளுடன் விளங்குவன.

நயம் என்பது தனக்கென ஒரு பொருளின்றிச் சார்ந்த இடத்திற்கேற்ப பல பொருள் தந்து நிற்கும் நயமான சொல்.

*பாரதிப்ரியா - விருதுநகர்.*

1. 'நயனில நட்டார் கண் செய்தலின் தீது' (குறள் 192) என்றவிடத்து விருப்பமிலவாகிய செயல்களை எனப்பொருள் கொண்டும்;

2. 'நயனில சொல்லினும் சொல்லுக' (குறள் 198) என்றதில் நீதியொடு படாத சொற்களை என்றும்;

3. 'நன்னயம் செய்து விடல்' (குறள் 314) என்பதற்கு இனிய உவகை எனவும்;

4, 'நயமில செய்வார்க்கும்' (குறள் 998) என்பதில் ஈரம் என்னும்

இதற்கான சான்றுகளும் உள.

1. பூமிதேவி, "பெரியாழ்வாரின் பக்தியைத் திருமாலிடம் கேட்டதும் அப்பெரியாழ்வாருக்குப் பெண்பிள்ளையாய்ப் பிறக்க விருப்பமுற்ருளென்றே"—எனவே நாச்சியார் ஆனுள்.

2. தானே விரும்பித் தன் மணுளனும் கருந்தெய்வக் கண்ணனைப் பற்றுக் கொண்டதால் நாச்சியார் ஆனுள்.

3. அவள் விருப்பத்தோடு சூட்டித் தந்த பூமாலையையும் எம்பெருமான் உவப்போடு ஏற்றுக் கொண்டதால் நாச்சியார் ஆனுள்.

இவ்வகையால் நாச்சியார் திருவாய் மலர்ந்தருளிய திருமொழிகள் யாவராலும் விரும்பப்படும் மேன்மை மொழிகள் என்போம்.

**கோதையின் திருமொழிகள்:**

கோதையின் இத்திருமொழிகள், "எம்பெருமானின் அனந்த கல்யாண குணங்களைப் பேசி, அவனருளை அடையும் பொருட்டு அவன் ஆண்மையிலும், தன் பெண்மையிலுமே மனத்தைச் செலுத்தி அவனேடு இரண்டறக் கலத்திற்கு வாழ்க்கையைப் பண்படுத்திக் கொள்ளல் முதலிய

நாளைக்குரிய பணியை இன்றே முடித்துவிடு
மாலைக்குரிய பணியை காலையே செய்துவிடு
(மகாபாரதம் 12—செய்யுள்7534)

காலமும், கடலலையும் யாருக்கும் காத்திருக்கா

உங்களுடைய சேமிப்பைத் துவக்க இதுவே சரியான நல்ல தருணம்

எங்கள் வங்கி வழங்கும் பல்வேறு வகையான சேமிப்புத் திட்டங்களின் மூலம் சிறிதே சேமியுங்கள்

உங்களுக்குத் தேவையானபோது, உங்கள் சேமிப்புத் தொகையினை பல்மடங்காக்கி வழங்குவோம்

தயைவுசெய்து, மற்றைய முழு விவரங்களுக்கு எங்கள் வங்கி கிளைகளுடனோ, அல்லது, கீழ்வரும் முகவரியுடனோ தொடர்பு கொள்ளவும்.

# தி கரூர் வைசியா பேங்க் லிமிடெட்,

பதிவு மற்றும் மத்திய அலுவலகம்

**ஜவஹர் பஜார், கரூர் - 639001.**

## வளமான வாழ்க்கைக்கு வழிகாட்டுவது எங்கள் வங்கி

ஜி. வெங்கடேசம்
**தலைவர்.**

தத்துவங்கள் அமைந்து கிடக்கின்றன,'' என்று திருமலாச்சாரியார் தெரிவிக்கின்றார் (பக்தன், மலர் 10 இதழ் 9, ப. 786).

''இத்திருமொழியிலே சிறுமியாகிய ஆண்டாள் காதலனுடன் வளர்ந்து கொண்டிருப்பதைக் காண்கிறோம். உருவெளித் தோற்றத்தில் தெய்வக் காதலன் உறவாடுவதைக் காண்கிறோம். கால வெள்ளம் பின்னோக்கிப் பாய ஆண்டாளின் காதல் வெள்ளத்துடன் கலந்து பெருகுவதைக் காண்கிறோம்,'' என்பார் பி. ஸ்ரீ அவர்கள் (கோதை அல்லது காதல் வெள்ளம் ப. 97)

எனவே நாச்சியார் யாதொரு தடைகளுமின்றிக் கண்ணனுக்கே தன்னை ஈந்தாள். மாலாம் மணி வண்ணனைத் தவிர, 'மறந்தும் புறந்தொழாத' பண்பினளாக விளங்கினாள்.

'கோல்தேடி ஓடும் கொழுந்தே
போன்றதே
மால்தேடி ஓடும் மனம்'

என்ற பூதத்தாழ்வாரின் வாக்குப் போன்று, அவள் மனம் மால்தேடி ஓடியது; அவளது கடலன்ன காதற் பெருக்கு ஓர் உறுதிப்பாட்டுடன் ஒப்பற்று விளங்கியது.

அவ்வுறுதிப்பாடுகளின் பல நிலைகளை அவரது திருமொழி அறிவிக்கிறது. அதனுள் ஒரே ஒரு நிலையை மட்டும் ஈண்டுக் காண்போம்.

**தொழுது வைத்தேன்**

கண்ணனுக்காகவே தான் மிகவும் ஆதரிக்கப்பட்டு சிறுபிராயம் முதல் வளர்க்கப்பட்டாளாம். தன்மங்கைப் பருவம் அவனுக்கேஉரிமையுடையது. தன் உடல் வளர்ச்சி அவனுக்கே அமைந்தது என்கின்றாள்.

அவரைக்கொடிமுளைத்ததும்இரண்டிலை விட்டுத் தோன்றி நிற்குமாம் போல நிற்கின்றாள். தன் உடல் வளர்ச்சியில் இளமையும் செழுமையும் கொண்டதோடு, உள்ள வளர்ச்சியில் வளமையும், பிடிப்பும்கொண்டு விளங்கினாள்.

அவரைப் பிராயம் தொடங்கி என்றும்
ஆதரித்து எழுந்த என்தட முலைகள்
துவரைப் பிரானுக்கே சங்கற் பித்து
தொழுது வைத்தேன். (1.4.3-4)

என்கின்றாள்.

அவளது உடம்பு துவாரகைப் பிரானும் கண்ணனுக்கு உடைமையுடையதாம். ஆம். அவள் அவனால் படைக்கப்பட்டவள் தானே. எனவே அவனுக்கே தன்னை அர்ப்பணிக்கின்றாள்.

தான் மானுடமாகப் பிறந்தாலும், மானுட சம்பந்தம் தன் உடம்புக்கு வேண்டாம் என உறுதி செய்கின்றாள். இவ்வுறுதிப் பாட்டினை மன்மதனை நோக்கியே இசைக்கின்றாள்.

ஊனிடை ஆழிசங்கு உத்தமர்க்கென்று
உன்னித் தெழுந்தயென் தடமுலைகள்
மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன்கண்டாய் மன்மதனே.
(1.5.3-4)

என்ற பாசுர வரிகள் ஈசுவனுக்குத் தன்னை அவள் தண்டா வேட்கையோடு ஈந்ததைத் தெரிவிக்கின்றன.

இவ்வாறு தெரிவிக்கலாமா? அதுவும் காமனை நோக்கியா தெரிவிப்பது?

''உனக்கே நாம் ஆட்செய்வோம், மற்றை நம் காமங்களை மாற்று'' எனக் கல் வெட்டாகக் கூறியவள் இவ்வாறு காமனை வேண்டுவதா? இவ்வாறு யாரேனும்செய்துள்ளார்களா?

அவனைப் பெறுகையே அவளது குறிக்கோள். எனவே காமன் காலில் என்ன? அவன் தம்பி சாமன் காலிலும் விழலாம். 'திருவயோத்தியுள்ள மக்கள் இராமனையல்லது பிறிதொரு தெய்வத்தை அறியாதிருந்தும், குட்டித் தெய்வங்களான ஐயன், பிடாரி இவைகளின் காலில் விழுந்தார்களே. அதுபோன்றே கண்ணனைப் பெறுதற்காகக் 'காமன் நோன்பும்' நோற்றாள். காலில் விழுந்தாள்.

ஆனால் உரைகாரர் வேறு வகையில் சிறப்பிக்கின்றார். அவனுக்கென்று அமைந்த உடம்பன்றோ. ஆகவே அதனையே வணங்கினாள் என்பர். ''கண்ணனை வணங்குவோர் அவன் உடைமைகளை வணங்குமாப் போலே இப்பாட்டு காமனை வழிபடாது ஆண்டாள் தன் முலைகளிடத்தே வழிபாடு நிகழ்த்தியதாகும்'' என்பர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார். (நாச்சியார் திருமொழி—ப. 9)

**உண்மையே!**

புறவழகு அழியும் தன்மையது. அகவழகு அழியாத் தன்மையது. அகவழகுடன் புறவழகும் அழியாத போதே கண்ணனும் கோவிந்தனை அடைய எண்ணுகின்றாள்.

ஏன்? அவை மானிடரைக் காணில் நாணம் கொள்ளும். கோவிந்தனுக்கே உரிமை உடையவை வேறு வாயில்களைத் தேடா,

..............................................

சிறுமா னிடவரைக் காணில் நாணும்
கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர்
கோவிந்த னுக்கல்லால் வாயில்போகா
(12-4, 2-3)

என்கிறாள். அதுமட்டுமா?

**என் ஆவி தங்கும்**

மேகத்தைத் தூது விட்ட போதும்

'' என்னாகத்து இளங்கொங்கை
விரும்பித்தான் நாடோறும் (8-4,3)

அவனது பொன்னாகம் புல்குதற்குப் புரிவுடையோம் எனப் பேசுகிறாள். ஏன் இவ்வாறு பேசுகிறாள்?

''மற்றவர்களுடைய மார்பு போன்றதன்று அவள் மார்பு. அவை ஆறியிருக்கும். இவை, 'என் விஷயத்தைக் காட்டு', எனப் பதறினபடியே இருக்கும் என்பது தோன்ற என்னாகத்து இளங்கொங்கை என்கிறாள்

என்னும்படி. இளங்கொள்கை=ஒரு வஸ்துவிலே விருப்பமுள்ள இளம் பிள்ளைகளைத் தாய் தந்தையர் எவ்வளவு சமாதானப் படுத்தினாலும் சமாதான மடையாமல் விரும்பின வஸ்துவைப் பெற்றல்லது விடாத பிடிவாதம் கொள்வது போல என் முலைகளும் எம்பெருமானது திருமார்போடே அணைந்தே தீர வேண்டுமென்ற பிடிவாதமுடையன என்கிறாள்—சொற் கேளாத பிரஜைகளைப் போலே யாய்த்து முலைகளின் படி''— என்பது வியாக்கியான சூக்தி.

எனவே கண்ணன் தன்னோடு கலந்து செய்ய வரவேண்டும். அதற்கேற்ப மார்பில் குங்குமம் அப்பிக் கோவத்துடன் வைத்திருக்கிறாள். அது பயன டையும்படி செய்தால் தன் உடம்பில் தன் ஆவி தங்கும் என்கின்றார்.

கொங்கைமேல் குங்குமத்தின்
குழம்பழியப் புகுந்தோர்நாள்
தங்குமேல் என்னாவி தங்கும்..........
(8-7, 3-4)

**பிறவிப்பயன்**

தன் ஆவி மானிடப்பிறவி எடுத்ததின் பயனைப் பேசுகின்றாள். இப்பிறவியில் இஃது அனுபவிக்கப் பெற்றால் ஏழேழ் பிறவிக்கும் வாய்க்கும் என்ற எண்ணம். 'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்; உற்றோமே யாவோம் உனக்கே ஆட்செய்வோம்' எனப் பாடியவள். எனவே

கொம்மை முலைகள் இடர்தீரக்
கோவிந் தற்கோர் குற்றேவல்
இம்மைப் பிறவி செய்யாதே
இனிப்போய் செய்யும்.........
(13-9, 1-2)

தவத்தால் பயனில்லை என இறுதியாகத் தெரிவிக்கின்றாள்.

ஏன்? முன்பே தன்னாவியை ஆகுலம் செய்தவை இக் கொங்கைகள் தாம் எனக் கூறியுள்ளாள். அவனோடு கலத்தல் கொள்ளும் ஆசையினால்

கொங்கை கிளர்ந்து குமைத்துக்
குதுகலித்து
ஆவியை ஆகுலம் செய்யும்,(5-7,2)
என்கின்றாள்.

இவ்வாறு ஒரு பெண் பேசலாமா? பிஞ்சிலே பழுத்தவள், எனவே இப்படித்தான் பேசுவாளோ? பின்பு ஆண்டாள் பேசிய பச்சைப் பேச்சுகளுக்கு என்ன பொருள்?

இதுவே அறிந்து கொள்ள வேண்டிய பொருள்.

**ஞானமும் பக்தியும் :**

இத் திருமொழிகளில் காணப் பெறும் இத் தொடர்கள் ஞான பக்திகளை இரு கொங்கைகளாகச் சொல்லுகின்றன.

''ஞான பக்திகளுக்கு இயற்கை வடிவென்றும், செயற்கை வடிவென்றும் இரண்டுண்டு. பகவத அனுபவத்திலே ஊற்றமுற்றிருக்கை இயற்கை வடிவு. விஷயாந்திரங்களிலே ஊன்றியிருக்கை செயற்கை வடிவு. (அடுத்து) கொங்கைகளின் மேல் குங்குமக் குழம்பு பூசுவது என்பது செயற்கை வடிவேயன்றி இயற்கை வடிவமன்று. ஆதலால் ஞான பக்திகளின் செயற்கை வடிவம் அழிய வேண்டும் என்பதாயிற்று. செந்நிறமான குங்குமக் குழம்பு அழிய வேணும் என்றபோதே செந்நிறமான 'ரஜோ குணம்' தொலைய வேணும் என்று கோருவதாகிறது''. (பக்தன், மலர் 10, இதழ் 9, ப. 703)

'ரஜோ குணம்', நீங்கத் 'தமோ குணம்' இல்லாததாயிற்று. இரு குணங்களும் இல்லாத போது, 'ஸத்துவ குணம்' ஓங்கிற்று. எனவே அகக் கவர்ச்சி பெரிதாயிற்று. மானுடத்திற்கு ஏற்பட்டு ஆட்பட்ட புறக் கவர்ச்சியின் பற்று அறுகிறது. அதாவது மறைப்புகள் முழுதும் நீங்குகின்றன. அதனால் பிரம்மத்திடம் ஏற்படும் அதியற்புத கவர்ச்சி பக்தியாகிறது.

பக்தனின் ஈடுபாடு தன்னையோ-தன் உடலைப் பற்றியோ கவலைப் படாதது! யான், எனது என்றவைகளினின்று நீங்கி அவனையே எண்ணும் இயல்பினது. மேலும் ஆழ்வார்களுள் பள்ள மடையெனப் பெண்ணாகப் பிறந்த ஆண்டாளின் மொழிப்பாடு வெளிப்படையானது. அது,

பெயரும் கருங்கடலே நோக்குமாறு
ஒண்பூ
உயரும் கதிரவனையே நோக்கும்—
உயிரும்
தருமனையே நோக்கும் ஒண்தாமரை
யாள் கேள்வன்
ஒருவனையே நோக்கும் உணர்வு

என்று பொய்கையாழ்வார் அருளிய படியுள்ள உயர்வினைக் கோதையின் திருமொழிகளில் காண முடிகிறது.

தான் பிறந்த பிறவியின் சுழல் தீர்க்க ஆசைப்படுகின்றாள். அதற்காக உருகி உருகி நைகின்றாள். உளளென்றும், இலளென்றும் உள்ள கோவர்த்தனனைக் காணவே குறிக்கோள். அவனைக் கண்டு, பயன் ஒன்றுமில்லாத புறக்கவர்ச்சியைக் கிழங்கோடும் அள்ளிப் பறித்து எறிந்து அவன் மார்போடு சேர்த்துத் தொழ எண்ணுகின்றாள்.

உள்ளே உருகி நைவேனை
உளவோ, இலளோ என்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக்
கோவர்த் தனனைக் கண்டக்கால்
கொள்ளும் பயனென் றில்லாத
கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டு அவன்மார்பில்
எறிந்தென் அழலைத் தீர்வேனே
(13-8)

இவ்வாறு தானும் தன்னுடைமைகளும் அவனுக்கே உரியவை என்கின்றாள்.

பிரகலாதன் தனது சொந்த ஆத்மனையே ஹரியாகத் தியானித்தான். ஆண்டாள் தனது அருமை உடலையும் ஹரியாகத் தியானித்தாள். முக்கரணங்களுள் உடலிலும் முழு முதல் ஈசுரவன் உளன் என மெய்ப்பித்தாள் கோதை நாச்சியார்.



# ★ விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும் ★

பழமையைப் போற்றுவோருள் பலர், புதுமையை வெறுக்கின்றனர். புதுமையைப் போற்றுவோருள் பலர் பழமையைப் புறக்கணிக்கின்றனர். இதற்குக் காரணம் அவர்கள் கொண்டிருக்கும் பயமும் ஐயமும் கலந்த தவறான கருத்தேயாகும். உதாரணமாக விஞ்ஞானத்தைப் பற்றியும் மெய்ஞ்ஞானத்தைப் பற்றியும் மக்கள் கொண்டிருக்கும் கருத்து வேறுபாட்டைக் கூறலாம்.

விஞ்ஞான வளர்ச்சி மெய்ஞ்ஞானத்தை அழித்து விடும் என்றும் மெய்ஞ்ஞான வளர்ச்சி விஞ்ஞானத்தைப் புறக்கணித்து விடும் என்றும் அஞ்சுகின்றனர். அப்படி அஞ்சுவதற்கு ஏற்பவே இன்றைய நிலையும் உள்ளது எனலாம். எனினும் நடுநிலையோடு ஆராய்ந்து பார்ப்பின் ஒரு நல்ல முடிவுக்கு நாம் வரமுடிகிறது. அந்த முடிவுப்படியே செயலாற்றினால் மேற்கூறியவாறு அச்சமோ ஐயமோ கொள்ளத் தேவையில்லை.

விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும் ஆகிய இவ்விரண்டுமே மனித வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு அவசியமாகும். விஞ்ஞானத்தைப் புறக்கணித்து விட்டு, மெய்ஞ்ஞானம் ஒன்றை மட்டும் போற்றுவதாலோ அன்றி மெய்ஞ்ஞானத்தைத் துறந்துவிட்டு விஞ்ஞானம் ஒன்றை மட்டும் வளர்ப்பதாலோ வாழ்வில் நிறைவை எய்திட முடியாது.

இதனை, டாக்டர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் எனும் விஞ்ஞானியின் கூற்று வலியுறுத்தும்.

Religion without science is blind,
Science without religion is lame.

*—Dr. Albert Einstein*

"விஞ்ஞானம் கலவாத சமயம்குருட்டுத் தன்மை வாய்ந்தது; சமயம் கலவாத விஞ்ஞானம் முடத்தன்மைவாய்ந்தது'

எனவே வாழ்வின் நிறைவுக்கு இரண்டும் தேவையே:

எனினும் விஞ்ஞானத்திலும் மெய்ஞ்ஞானம் மேலோங்கி இருக்க வேண்டும் என்பதையே இன்றைய வாழ்க்கை நிலை நமக்குப் புலப்படுத்துகின்றது.

பிற நாட்டவர்கள் விஞ்ஞானத்தில் அக்கறை காட்டிய அளவு மெய்ஞ்ஞானத்தில் காட்டவில்லை. பலர் இம்மெய்ஞ்ஞானத்தில் ஆர்வம் குன்றி இருந்தமைக்குக் காரணம், விஞ்ஞானமே மனித வாழ்க்கையை உயர்த்தும் எனக் கருதினமையே யாகும். ஆகையால்தான் அங்கெல்லாம் மெய்ஞ்ஞான ஆராய்ச்சியினும் விஞ்ஞான ஆராய்ச்சியிலேயே வல்லுநர்களாய்ப் பலர் விளங்கினர்; விளங்குகின்றனர்.

நம் நாட்டவரோ மெய்ஞ்ஞானத் துறையைப் பற்றியே மிகுதியும் ஆராய்ந்தனர். அகப்பண்பாடுகளையே வலியுறுத்தினர். ஆன்ம விதிகளையே போற்றினர். மெய்ஞ்ஞானமே மனித வாழ்வைச் செம்மைப்படுத்தி உயர்த்தும் என நம்பினர். அதனால் இத்துறையில் முனிவர்கள், ஞானிகள், நாயன்மார்கள், ஆழ்வார்கள், ஆசாரியர்கள் எனப் பலர் தோன்றிப் பணி புரிந்தனர்; புரிகின்றனர்.

எனினும் இன்று காலத்துக்கேற்ப நம் நாட்டிலும் விஞ்ஞானிகள் தோன்றாமல் இல்லை; தோன்றினர். அவர்கள் உலகம் போற்றவும் வாழ்ந்தனர், வாழ்கின்றனர். சர். ஜகதீச சந்திரபோஸ், கே.எஸ். கிருஷ்ணன், சர். சி. வி. இராமன், ஜி. டி. நாயுடு முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

புலவர். நடேச நாராயணன், பி.லிட்
சென்னை.

இவர்கள் மெய்ஞ்ஞானத்தையே பெரிதும் வளர்த்த நம் நாட்டில் தோன்றியதால் தீமை பயப்பனவற்யே ஆராய்ந்தனர். அழிவுத்துறைக்கு ஆராய்ச்சியைப் பயன்படுத்தாமல் ஆக்கத் துறைக்கே பயன் படுத்தினர்.

இவ்வாறு நம் நாட்டவர் ஓரளவு விஞ்ஞானத்தை வளர்த்தபோதிலும் அதனை மேன்மேலும் வளர்க்க முயலவில்லை; விரும்பவில்லை. விரும்பியிருந்தால் பிற நாட்டவரைப்போல் நம் நாட்டவரும் விஞ்ஞானத்தில் சிறந்திருக்கமுடியும்.

பழங்காலத்திலேயே நம் நாட்டவர் வான ஆராய்ச்சி செய்திருக்கின்றனர் என்பதைச் சோதிடம் முதலான சாத்திரங்களால் அறியலாம். உயிரியலில் வல்லவனாய் விளங்கினான் என்பதை தொல்காப்பியம் முதலான நூல்களால் அறியலாம். கட்டடக் கலையில் வல்லுநராய் விளங்கினர் என்பதைக் கோயில்களாலும் மண்டபங்களாலும் அறியலாம். தாவர இயலில் ஆற்றல் மிக்கவராய் விளங்கினர் என்பதை மருத்துவ நூல்களால் அறியலாம். கைத் தொழிலில் சிறந்தது விளங்கினர் என்பதை மெல்லிய நூல் ஆடைகளால் கலைத்திறம் மிக்க பாத்திரங்களாலும் அறியலாம். இத்தகைய பேராற்றல் கொண்ட நம் நாட்டவர் முயன்றிருந்தால் விஞ்ஞானத்தை வளர்த்திருக்க முடியாதா? முடியும். ஆனால் விரும்பவில்லை.

விஞ்ஞானத்தில் அளவுக்கு மீறிய அக்கறையும் ஆர்வமும் காட்டா

மைக்குக் காரணம் ஒன்றுண்டு. விஞ்ஞான வளர்ச்சி அளவோடு அமையாமல் நிதானம் தவறிடச் செய்யும், நேர்மை மாறிடவும் செய்யும். 'நான்' என்னும் அகந்தையை உண்டு பண்ணி, ஒரு காலத்தில் தனது அழிவிற்கே காரணமாய் அமைந்து விடவும்கூடும் என்று கருதினர்.

இதனை, டாக்டர். இராதாகிருஷ்ணன் அவர்களின் கூற்றும் உறுதிப் படுத்தும்,

Science without religion is arrogance

'' சமயத்தோடு இயைபில்லாத விஞ்ஞா-னம் அகந்தை மிக்கது ''

ஆனால் மெய்ஞ்ஞான வளர்ச்சியால் இத்தகைய தீங்கு விளையாது. காரணம், மெய்ஞ்ஞானம் தன்னைப் பற்றியே—மனிதனின் உள்ளப்போக்கினைப் பற்றியே—மிகுதியும் கூறுவதாக உள்ளதால் தவறு நேரும் சமயத்தில் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள உதவும். அதனால் அகந்தையோ அழிவோ நிதானம் இன்மையோ ஏற்படாதவாறு காத்துக் கொள்ள முடியும் என்பதேயாகும்.

இத்தகைய தெளிவால்தான் நம் நாடு விஞ்ஞானத்தினும் மெய்ஞ்ஞானத்தைப் பெரிதும் போற்றுகிறது. விஞ்ஞான வளர்ச்சி இறுதியில் அழிவில் முடியும் என்பதையும் மெய்ஞ்ஞானமே வாழ்வைச் செம்மைப் படுத்தி நிறைவாக்கும் என்பதனையும் வல்லரசுகளும் உணர்ந்து கொள்ளுமாறு இன்று நம் நாடு எடுத்துக் காட்டி வருகின்றது.

மெய்ஞ்ஞானத்தில் நம்பிக்கையும் பற்றும் குறைந்து விட்ட காரணத்தால் அறம், நீதி, சமயம் போன்ற பண்பாடுகள் ஊன்றி நிலைக்கவில்லை. அதனால் ஒருவரை ஒருவர் நம்பாமல் ஐயுற்று அஞ்சுகின்றனர். ஒருவரை ஒருவர் அழித்து வாழ முயல்கின்றனர். துன்புறுத்தி மகிழ்கின்றனர். சமாதானத்தின் இன்றியமையாமையை உணர்ந்த போதிலும் மெய்ஞ்ஞானத்தில் நம்பிக்கை இல்லாக் காரணத்தால் உணர்ந்ததைச் செயல்படுத்த முடியாமல் சிக்கித் தவிக்கின்றனர். தீய கருவிகளையெல்லாம் ஆராய்ந்து கண்டு அழிவுக்கு வழி வகுக்கின்றனர். விஞ்ஞானத்தையே ஓர் அச்சமூட்டும் பயங்கரச் சக்தியாக மாற்றி விட்டனர்.

வாழ்வை வளப்படுத்தவும் சமூகத்தை வளர்ச்சி பெறச் செய்யவும் இயற்கையின் புதிர்களை விடுவிக்கவும் உதவிய விஞ்ஞானம், இன்று வாழ்வைக் கெடுக்கவும் சமூகத்தை அழிக்கவும்இயற்கை வாழ்வை நாசப் படுத்தவும் காரணமாய் அமைகின்றது. உலகை எந்த நேரமும் அச்சத்தில் ஆழ்த்தி வருகிறது. போட்டியையும் பொறாமையையும் ஆணவத்தையும் அநியாயத்தையும் கால் கொள்ளச் செய்கிறது. அது வாழ்க்கைக்கு ஒரு கருவியாய் இருந்தது போய் இன்று வாழ்க்கையே அதன் பிடியில் அகப்பட்டுச் சிக்கித் தவிப்பதைக் காண்கிறோம். காயை அறுப்பதற்குச் செய்த கத்தியை, கழுத்தை அறுக்கப் பயன்படுத்த முனையும் முறையற்ற செயல்போல் இன்று விஞ்ஞானம் தாழ்ந்து விட்டிருக்கிறது.

விஞ்ஞானத்தில் வளர்ந்த அளவு மெய்ஞ்ஞானத்தில் அக்கறை காட்டத் தவறினமையே இத்தகைய இழிநிலைக்குக் காரணம். மெய்ஞ்ஞானத்தில் அவநம்பிக்கையும் அக்கறையின்மையும் கொண்ட நிலையில், விஞ்ஞானத்தால் எய்தும் எத்தகைய முன்னேற்றமும் நலம் பயப்பதாக அமையாது. அமைதியையும் மகிழ்வையும்

## சங்கு சக்கர ஆஞ்சநேயர்

**எஸ். விஜயா சீனிவாசன்—திருச்சி.**

சோளங்கிபுரத்திலுள்ள சின்ன மலையில் யோக நிலையில் யோக ஆஞ்சநேயர் வீற்றிருக்கிறார். வேறு எந்தக் கோவிலிலும் இல்லாத புதுமை இந்த ஆஞ்சநேயருக்கு உண்டு!

இந்த ஆஞ்சநேயர் நான்குத் திருக்கரங்களுடன் சங்குசக்கர தாரியாக யோகாசனத்தில் நரஸிம்மரை நோக்கி வீற்றிருக்கிறார். இப்படி ஆஞ்சநேயர் சங்கு சக்கரத்தோடு காட்சி தருவது புதுமை தானே?

இந்திரத்யும்னன் என்ற மன்னன் அசுரர்களோடு கடும்போர் புரிந்து, வெற்றிக்காக நரஸிம்மப் பெருமாளின் திருவருள் வேண்டி நின்றான். எம்பெருமான் தன் பக்தனுக்கு உதவும் பொருட்டு ஆஞ்சநேயரிடம் தன் சங்கு, சக்கரங்களைக் கொடுத்து பகைவர்களை அழிக்கக் கட்டளையிட்டார்.

ஆஞ்சநேயர் பகைவர்களை அழித்தபின் சங்கு சக்கரங்களை குன்றிலுள்ள தடாகத்தில் சுத்தம் செய்து நரஸிம்மரிடம் கொடுத்தார். எம்பெருமாள் ஆஞ்சநேயரிடம் ''நீ என்னைப் போல் சங்கு சக்கரம் தரித்து சதுர்புஜனாய் எனக்கெதிரில் அமர்ந்து நம்மை நாடி வருபவர்களைக் காப்பாற்று'' என்று அருளினார்.

இதனால்தான் இங்கு மட்டும் ஆஞ்சநேயர் சங்கு சக்கரதாரியாக அமர்ந்து, பக்தர்களின் குறைகளைத் தீர்த்து வைக்கிறார். இவர் சக்கரங்களை சுத்தம் செய்த தீர்த்தமே 'சக்கர தீர்த்தம்' என்ற பெயரில் குன்றில் உள்ளது.

நிலைநாட்ட அந்த முன்னேற்றம் வழி வகுக்காது. அல்லலையும் ஏக்கத்தையும் பூசலையும் பொறுமையையுமே தருவதாக அமையும்.

இன்றைய நிலையில் இதனை நீக்கும் வழி, விஞ்ஞான வளர்ச்சியைத் தடுப்பதல்ல: அதன் வளர்ச்சியை மடை மாற்றம் செய்து வேறு வகையில் செலுத்துவதுதான். அவ்வாறுயின் விஞ்ஞானத்தை வளர்க்கும் பொறுப்பிலுள்ளோர், மெய்ஞ்ஞானத்தில் பற்றும் நம்பிக்கையும் உடையவராக ஆதல் வேண்டும். மெஞ்ஞானத்தின் கண்காணிப்பிலேயே விஞ்ஞானம் வளர்தல் வேண்டும். அதனைப் புறக்கணித்து வளரும் விஞ்ஞானம் எந்த வகையிலும் நன்மையாக முடியாது. தொடக்கத்தில் நன்மையாகத் தோன்றினும் இறுதியில் தீமையாகவே முடியும் என்பதில் ஐயம் இல்லை. ஆதலால் மெய்ஞ்ஞானத்திற்கு இழுக்கு உண்டாக்காத வகையில் விஞ்ஞானம் வளர்ச்சியடைதல் வேண்டும். மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படக் கூடிய வகையிலேயே வளர்க்கப்படல் வேண்டும்.

உடலை மட்டும் பேணி உள்ளத்தைப் புறக்கணித்தால் உள்ளத்துக்கு உடல் கட்டுப்படாமல்கெட்டு அழியும். உள்ளத்தை மட்டும்பேணி உடலை அலட்சியப்படுத்தினுல் உள்ளத்தின் லட்சியங்களை நிறைவேற்ற உடலின் ஒத்துழைப்பை பெற முடியாமல் ஏங்க நேரிடும். எனவே உடலைப் போற்றி உள்ளத்தைப்புறக்கணிப்பதோ உள்ளத்தைப் போற்றி உடலைப் புறக்கணிப்பதோ கூடாது. உடல் உள்ளம் இரண்டையும் ஒரு சேரப் போற்றிப் பேணுதலே சிறந்தது. மனிதன் உடம்போடும் வாழ வேண்டும். மனத்தோடும் வாழவேண்டும். விஞ்ஞானத்தைப் பயன்படுத்தி வசதிகளைப் பெருக்குவது மட்டும் போதாது. நோய் குறைந்த உடம்பும் கவலை குறைந்த உள்ளமும் பெறுவதற்கு வழிதேடல் வேண்டும். உடலைப்பேணவே வழிபாடு.ஆராய்ச்சியே விஞ்ஞானம். வழிபாடே மெய்ஞ்ஞானம். உடலைப் பேணுவது போன்றதே விஞ்ஞானத்தை வளர்ப்பது; உள்ளத்தை நெறிப்படுத்துவது போன்றதே மெய்ஞ்ஞானத்தைப் போற்றுவது.

இங்கே இன்னொரு கருத்தையும் நாம் மறந்துவிடக் கூடாது. 'உடம்பு நோய்வாய்ப்பட்டாலும் பெரிய குறையல்ல. மனம் நோய்வாய்ப் பட்டால் அதற்குப் பிறகு வாழ்வு சிறக்காது.' உடலைப்பற்றி அக்கறை செலுத்தாமல் உள்ளத்தை மட்டும் பேணிப் போற்றுபவர்களுள் ஒரு சிலரே துன்புறுவர்; ஆனுல் உள்ளத்தைப்பற்றி அக்கறை செலுத்தாமல் உடலை மட்டும் பேணிப் பாதுகாப்பவருள் மிகப் பலர் கெட்டு அழிவர் என்பதை யாரும் மறுத்து விடமுடியாது. அதுபோலவே விஞ்ஞானத்தில் அக்கறை காட்டாமல் மெய்ஞ்ஞானத்தில் மட்டும் அக்கறை காட்டுவதால் ஒரு சிறு இழப்பே நேரக் கூடும். ஆனுல் மெய்ஞ்ஞானத்தில் அக்கறைகாட்டாமல்விஞ்ஞானத்தை மட்டும் பேணுவதால் எல்லையில்லா இழப்பு நேர்ந்து விடும் என்பதை மறந்து விடக் கூடாது.

உடல், தானே வளரும் தன்மையுடையது. ஆனுல் உள்ளமோ படிப்பாலும் பழக்கத்தாலும் பயிற்சியாலும் முயற்சியாலுமே பண்படும் தன்மையுடையது. அதுபோல விஞ்ஞானம் வளர்தல் இயல்பே. பரவுதலும் எளிதே! ஆனுல் மெய்ஞ்ஞானம் அவ்வளவு எளிதில் ஊன்றுது; பரவாது. விஞ்ஞானச் சாதனங்களை ஒருவன் கண்டு பிடித்தாலும் அது பலர்க்கும் பயன்படமுடியும். ஆனுல் மெய்ஞ்ஞானமோ ஒருவன் கண்டு பலர்க்கும் எளிதில் அமைந்து விடுவதன்று. ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே உணர்ந்து செயல் படவேண்டியதாய் உள்ளது. விஞ்ஞானப் பொருள்கள் பொறி புலன்களோடுமட்டுமே மிகுதியும் தொடர்புடையவைகளாக இருப்பதால்அவற்றை ஒருவன் கண்டு பிடிக்கவும் பலர் பயன் படுத்திக் கொள்ளவும் முடிகிறது. மெய்ஞ்ஞானமோ பெரிதும் மனத்தோடு தொடர்பு உடையது. அதனுல் அதனை ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே உன்னித் தெளிந்து நம்பிப் பின்பற்ற வேண்டியுள்ளது.

இனிவரும் பரம்பரையினர்க்கும் பயன்படவேண்டும் என்று எண்ணிச் சொத்தைச் சேர்த்துவைக்கமுடியும். அதை அடுத்து வரும் பரம்பரை பயன்படுத்திக் கொள்ளவும் முடியும். ஆனுல் கல்வியைச் சேர்த்து வைக்க முடியுமா? முடியாது. ஒவ்வொருவனும் தன் முயற்சியாலேயே கற்றுக வேண்டும். அதுபோல இன்றுவரை கண்டுள்ள விஞ்ஞானச் சாதனங்கள் அனைத்தும் இனிவரும் பரம்பரையினர்க்கும் பயன்பட முடியும். ஆனுல் மெய்ஞ்ஞானமோ அவரவர்களே அறிந்து உணர்ந்து அடையவேண்டிய ஒன்றுக உள்ளது. கண்டுபிடிக்கும் வரையில்தான் விஞ்ஞானச் சாதனங்களுக்குஆராய்ச்சி தேவைப்படுகிறது. அதன் பிறகு யார் வேண்டுமாயினும் அதைப் பயன்படுத்தலாம். அதற்காக ஒவ்வொருவனும் ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்பதில்லை. இது பெற்ருேர் சேர்த்து வைத்த சொத்தைப் பிள்ளைகள் அனுபவிப்பது போன்ற நிலை. மெய்ஞ்ஞானத்தையோ ஒவ்வொருவனும் முயன்று மேற்கொள்ள வேண்டியுள்ளது. இது, பிள்ளைகள் தங்களுக்குத் தாங்களே கல்வியை முயன்று கற்று வாழும் நிலை.

இதனுல் பெறப்படுவது யாதெனில் விஞ்ஞானத்தில் செலுத்தும் அக்கறையைவிட மெய்ஞ்ஞானத்தில் அதிக அக்கறை செலுத்தவேண்டும் என்பதே. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானுல் அகவாழ்வில் மெய்ஞ்ஞானமும் புறவாழ்வில் மெய்ஞ்ஞானமும் மிளிர வேண்டும். என்றும் மெய்ஞ்ஞான மேன்மையில் விஞ்ஞானம் விளங்கவேண்டும். அதாவது மெய்ஞ்ஞான ஆட்சியின்கீழ்தான் விஞ்ஞானம் செயல்படவேண்டும். இதுவே நாடு நலம்பெற நல்லதொரு வழியாகவும் உலகின் அமைதிக்கும் ஆனந்தத்திற்கும் உரிய நெறியாகவும் அமைய முடியும்.



# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யார்.

**பாசுரங்களின் அடிப்படையில் பிரிவு என்ன?**

1. திருவரங்கமும் —திருப்பதியும் ... 200 பாசுரங்கள் பெற்றவை
2. திருக்கண்ணபுரம், நாச்சியார்கோயில் என்ற திருநறையூர், அழகர்கோயில் என்ற திருமாலிருஞ் சோலைமலை } 100-க்கு மேல் பாசுரங்கள் பெற்றவை
3. 49 தலங்கள் ... 11-க்குமேல் 100 பாடல்கள் பெற்றவை.
4. 24 தலங்கள் ... 10 பாடல்கள் பெற்றவை.
5. 15 தலங்கள் ... 2 முதல் 9 வரை பாடல்கள் பெற்றவை
6. 15 தலங்கள் ... 1பாடல்பெற்றவை

துணுக்குப் பாடல் பெற்றவைகளும் இதனுள் அடங்கும். (துணுக்கு என்ருல் ஒரு பாடலில் இடையே குறிப்பிடுவதைக் குறிக்கும்)

**திருக்கோல அமைப்பில் பிரிவு எவ்வளவு?**

திருமால், ஆலயங்களில் பள்ளிகொண்டும், நின்றும், அமர்ந்தும், மூன்று விதமான திருக் கோலங்கள் கொண்டிருப்பார்.

1. 60 நின்ற திருக்கோலம்கொண்ட தலங்கள்
2. 21 வீற்றிருந்த திருக்கோலம் கொண்ட தலங்கள்.
3. 27 பள்ளிகொண்ட திருக்கோலம்கொண்ட தலங்கள்.

**திருமாலுக்கு உகந்த பணி என்ன?**

1. புதிதாகத் தேவாலயம் சமைத்தல் சிறந்தது தான். ஆயினும் பழுதாய்ப்போன ஆலயங் களுக்குத் திருப்பணி செய்வதை மிகவும் சிறந் தது எனப் பத்ம ஸம்ஹிதை கூறுகிறது.
2. பழைய தேவாலயத்தைப் புதுப்பிக்கிறவர்கள், கடவுள் உருவத்தையோ, மந்திரங்கள், அருச் சனை, முதலியவற்றையோ மாற்றுதல் கூடாது எனவும் பத்ம புராணம் கூறுகிறது.
3. கடவுளின் ஸாந்நித்தியம் அதிகரிக்க : 1. யந்தி ரஸ்தாபனம், 2. மந்திரஜபம், 3. நித்திய நைமித்திக ஆராதனம், 4. வேதபாராயணம், 5. அருளிச் செயல் அனுஸந்தானம். 6. புராண படனங்கள், 7. திருமாலின் பெருமையைச் சொல்லும் தமிழ்—வடமொழி தோத்திரங் களைச் சிரத்தையுடன் நடந்தேறச் செய்யவேண் டும்.
4. கோயிலில் ஒரு பசு மாட்டின் உடல் தோல் அளவு—அதாவது கிட்டத்தட்ட 8 அடிகள் கொண்ட நிலத்தையாவது பசும் சாணத்தால் மெழுகிச் சுத்தி செய்தல், கோலம் போடுதல் முதலியன மிகுந்த நன்மையைத் தரும்.
5. கோயில்களில் துளசிச்செடி, வாசனையுள்ள நறுமலர்ச்செடி, இவைகளை வளர்த்தல், தோட் டம் அமைத்தல். முதலியன அளவற்ற நன்மை களைத் தரும்.
6. மாலை சமர்ப்பித்தல், திருவிளக்கு சமர்ப்பித்தல் முதலியன.

**எம்பெருமானின் சயன வகைகள் எவை?**

1. உத்தியோக சயனம், 2. தருப்ப சயனம், 3. புஜங்கசயனம், 4. போகசயனம், 5. மாணிக்க சயனம், 6. வடபத்திர சயனம், 7. வீரசயனம், 8. தல சயனம் என ஆக எட்டு.

**ஆகமம் என்ருல் என்ன?**

ஆகமம் என்ருல் தொன்று தொட்டு வரும் பழைமையான அறிவு அல்லது சாஸ்திரம் என்று பொரு ளாகும். வைணவர்கள் வேதத்தைப் போல் ஆகமங் களுக்கும் ஏற்றம் கூறுவார்கள். இது கோவில்களி லும், வீடுகளிலும் ஆராதிக்கப்படும் திருமால் விக்கி ரகத்தின் தத்துவத்தைப் பற்றியும், வழிபாட்டு முறைகளைப் பற்றியும் கூறும் வடமொழி நூலாகும். அவை, விக்கிரக ஆராதனையின் தத்துவச் சிறப்பை விளக்குவதுடன், கோயில், திருமால் வடிவம் இவை களை அமைக்கும் முறைகளைப் பற்றியும், அத்துடன் திருவிழாக்களின் முறைகளையும் எடுத்து விளக்கும் நூலாகும். வேதம் பெருமாளின் முச்சுக்காற்ருனல், ஆகமம் பெருமாளின் திருமுகமண்டலத்தின் வாய்க் காற்ருகும். வேதம் போல் பிரமாணமுள்ளது.

**வைணவ ஆகம வகை என்ன?**

''வைகானஸம்''—''பாஞ்சாரத்திரம்'' என இருவகைப்படும்.

**வைகானஸ ஆகமத்தின் சிறப்பு என்ன?**

திருமாலின் திருமார்பிலிருந்து தோன்றிய விகனஸர் என்ற முனிவரால் தமது சீடர்களான மரீசி, அத்திரி, பிருகு,கச்சியபர்என்ற நால்வருக்கும் நான்கு லக்ஷம் செய்யுள்களின் மூலம் உபதேசிக்கப்பட்டது. வைகானஸ ஆகமத்தைப் பின்பற்றுகிறவர்களை வைகானஸர்கள் என்பார்கள். இவர்களுக்குத் திக்ஷை நெறி முக்கியம். விகனஸ சூத்திரம் 11 பிரச்சினமும் 8 மந்திரப் பிரச்னங்களும், மற்றும் ஆலயநிர்மாணம், திருவிழா முறைகள், பிராய்ச்சித்தம் முதலிய விளக் கம் கொண்டது. திருப்பதி போன்ற திவ்விய க்ஷேத்தி ரங்களில் வைகானஸ அருச்சகர்கள்தான் பெருமாள் ஆராதனம் செய்கிருர்கள். இவர்களைத் தவிர மற் ருேர்கள் இத்தகைய திருகோயில்களில் ஆராதனம் செய்யக்கூடாது என்பார்கள். இவர்கள் நெறி, வேதத்தை அடிப்படையாகக் கொண்டது; வைகா னஸ ஆகமம் நூலில் வழிபாட்டு முறை விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

# ★ கார்த்திகைத் திருநாள் ★

"சோதியே சுடரே சூழொளி விளக்கே" என்று பாடினார் மாணிக்கவாசகர். இறைவன் அருட் பெரும் சோதியாக விளங்குபவன். அந்த சோதியின் ஒளியே இன்பமாக வும் ஒளியாகவும் ஒலியாகவும் வேறு வேறு உணர்வுகளில் நிலவுகிறது. அஞ்ஞானமென்னும் இருளுக்கு அப் பாலே இடமும் காலமும் ஆகிய எல்லை கடந்து எல்லா பொருள் களினூடும் சுரந்து நின்றும் எல்லாப் பொருளையும் தன்னுள் அடக்கியும் நிலவும் அகண்டமான சோதி அது. அந்த சோதியை யாரும் காண முடி யாது. ஆனந்தமயமாகிய இந்த சோதியே தன் நிலையினின்றும் இறங்கி உயிர்க் கூட்டங்களின் இரு ளைப் போக்க அருள் கூர்கிறது.

சூரியனாகவும் சந்திரனாகவும் உள்ள ஒளிப் பிழம்புகள் உலகில் படரும் இருளைப் போக்குகின்றன; உலகமாகிய பெரிய வீட்டுக்கு வைத்த இரண்டு விளக்குகள் அவை. அந்த இரண்டு விளக்குகள் இல்லா விட்டால் மனிதன் கண் இருந்தும் குருடனாகி விடுவான். உலகத்துக்குக் கண்களாகிய சூர்ய சந்திரர்கள் உதித்தால் அன்றி மக்கள் கண் ணொளி பெற மாட்டார்கள். சோதி யாக நின்ற இறைவனே சூரியனாக வும் சந்திரனாகவும் விளங்குகிறான். அவனுடைய திருவருள் அவ்விரண்டு சுடரினுள்ளும் இல்லாவிட்டால் அவற்றால் ஒளி தர முடியாது.

சோதியாகவும் சுடராகவும் இருக் கும் பெருமான் பின்னும் குறுகு கிறான். பின்னும் அணுகி வரு கிறான். அக்னியின் உருவமாகிய விளக்காக வருகிறான். சோதியை நாம் காண முடியாது. ஆனால் சுடர்களைக் காணலாம். சுடர்களை நாம் நினைத்த இடங்களில் வைக்க முடியாது. விளக்கை வைக்கலாம். சோதி மனம் வாக்கு காயம் மூன்றுக் கும் எட்டாதது. சுடர்கள் மனத் துக்கும் வாக்குக்கும் கண்ணுக்கும் எட்டுபவை. கைக்கு எட்டாதவை.



சுடர் விளக்கோ கைக்கும் எட்டு வது. அந்தச் சுடர் விளக்கின் ஒளி யாக திகழ்பவனுக்கு இறைவன் என்று பெயர்.

---

**திரு. என். ராமகிருஷ்ணா - மாயூரம்.**

சோதியாக நிற்கும் பெருமான் தன் கருணையின் திறத்தால் சுடராக வருகிறான்; பின்னும் கருணை பெருகப் பெருக விளக்காக வருகிறான்.

சோதியினால் அக இருளாகிய அஞ் ஞானம் அழியும். சுடர்களினால் உலகத்திலே பரவும் புறஇருள் அக லும். ஒளி விளக்கினால் மூலையிலே முடுக்கிலே உள்ள இருள் ஏகும். இருட்குலத்தை நாசஞ் செய்வதற் காகவே சோதியும், சுடரும், சூழொளி விளக்கும் இருக்கின்றன.

வீட்டின் மூலையிலேயே முடங்கிய இருளைப் போக்க சிறிய அகலை ஏற்றி வைக்கிறோம். பளிச் சென்று அங்கே சூழ்ந்த இருள் ஓடி விடுகின் றது. அந்தச் சிறிய அகல் விளக்கிலே இறைவன் இருப்பதை உணர வேண் டும். விரிந்த உலக இருளை போக்க சூரியன் உதிக்கின்றான்; சந்திரன் தோன்றுகிறான். இந்த இரு சுட ரும் கடவுளின் அருளால் ஒளிர்கின் றன என்று தெரிந்து கொள்ள வேண்டும். அப்பால் இவற்றிற் கெல்லாம் மூலமாகிய சோதி ஒன்று உண்டென்பதை தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த மூன்று நிலைமையையும் நம் கருத்திலே ஊன்றச் செய்வதுதான் கார்த்திகை திருநாளின் தத்துவம். தமிழ்நாடு முழுவதும் கார்த்திகை மாதத்து பௌர்ணமியன்று கார்த் திகை விழாவை கொண்டாடுகின்றார் கள். எத்தனை விளக்குகள் கிடைக்குமோ அத்தனை விளக்குகளை யும் சேர்த்து எல்லாவற்றையும் ஏற்றி அணி அணியாக வீட்டில் பல இடங்களிலும் வைத்து சுடர் கோலம் செய்து இறைவனை வழிபடு கின்றார்கள். திருக்கோயில்களிலும் திருவிளக்கு ஏற்றி சுட்கப்பனைக் கொளுத்தி விழா கொண்டாடுவது நம்நாட்டு வழக்கம். பனை மடலை யும் தென்னை மட்டைகளையும் கொண்டு பெரிய கூம்புகள் கட்டி கொளுத்துவார்கள். அதுதான் சுட் கப்பனை அல்லது சொக்கப்பனை என்ற பெயர் பெறும். இறைவன் சோதி வடிவானவன் என்பதைத்தெரி விப்பதற்காகவே சொக்கப்பனைச் கொளுத்துகின்றார்கள். எல்லா



கோவில்களிலும் வேறுபாடின்றிக் கார்த்திகைச் சொக்கப்பனையை— கார்த்திகை சொக்கப்பனை–கொளுத்துவார்கள். வீடுதோறும் கார்த்திகை தீபம் உண்டு. கோயில்கள்தோறும் கார்த்திகை விழா உண்டு. ஆனால் கார்த்திகை திருநாள் என்றவுடனே எல்லோருக்கும் திருவண்ணாமலை தான் நினைவுக்கு வரும்.

அண்ணாமலை தீபம் பழங்காலே முதலே சிறப்பு பெற்றது. "மலை மேல் விளக்கு" "குன்றின் மேல் இட்ட விளக்கு" என்ற பழமொழிகள் என்று உண்டாயினவோ அன்றே திருவண்ணாமலை கார்த்திகை தீபம் தமிழ்நாட்டில் புகழ் பெற்று விட்டது.

திருவண்ணாமலையை அருணாசலம் என்று வடமொழியில் சொல்வார்கள். அங்குள்ள மலையே சிவபெருமானுடைய திருஉருவம் என்பார்கள். அறிவினால் செருக்குற்றவர்களும் பொருளினால் செருக்குற்றவர்களும் அருள் பெற மாட்டார்கள் என்ற உண்மையை விளக்க இத் தலத்தில் இறைவன் ஒரு திருவிளையாடலை நிகழ்த்தினான். திருவுக்கு நாயகனும், கலைத் தெய்வத்தின் கணவனும் தமக்குள் யார் பெரியவர் என்று வாதிட்டுக் கொண்டனர். அருளுக்கு நாயகனிடத்தில் அணுகி, தம் வாதத்தை கூறினர். அப்பெருமான் படைக்கும் தேவனை முடி காணவும், அளிக்கும் தேவனை அடி தேடவும் பணித்து பெருஞ் சோதி வடிவாக நின்றான். உடனே நான்முகன் அன்ன உருவெடுத்து மேலே பறந்து முடிதேட சென்றான். மாயன் வராகம் உருவம் எடுத்து அடி தேடினான், இருவரும் தாம் தேடி புகுந்ததைக் காண முடியால் தடுமாறி நின்றார்கள். அருட்சோதி வடிவான நிலையே அறிவையும் பொருளையும் விடப் பெரிது என்ற உண்மை புலப்பட்டது. இறைவன் செஞ்சோதி பெருமலையாக நின்ற இடமே திருவண்ணாமலை. அருணாசலம் என்ற தொடருக்குச் சிவந்த மலை என்று பொருள். சோதிமலையாக நின்ற பெருமான் அப்பால் யாவரும் காண இயல்பான மலையாக நின்றான். இப்படி புராண வரலாறு கூறுகின்றது.

ஆதலின் திருவண்ணாமலையே சிவபெருமானுடைய திருஉருவம். இதனை அறிந்தே அன்பர்கள் இந்த மலையை வலம் வருகிறார்கள். சிவப்பிரகாச சுவாமிகள் என்ற பெரியார் இந்த மலையை பிரதட்சிணம் செய்தார். ஒரு முறை வலம் வருவதற்குள் இந்த மலையை நூறு பாடல்களால் பாடித் துதித்தார். அந்த நூலுக்கு "சோண சைல மாலை" என்று பெயர்.

மலையின் அடிவாரத்தை சார்ந்து பெரிய திருக்கோவில் உளது. மூவருடைய தேவாரம் பெற்றது. உண்ணாமுலை அம்மையோடு எழுந்தருளியிருக்கும் அண்ணாமலையப்பரை தரிசிக்கவும் கார்த்திகை விழாவன்று மலையின்மேல் ஏற்றும் தீபத்தை தரிசிக்கவும் ஆயிரக்கணக்கான மக்கள் வருகின்றார்கள். கார்த்திகை தீபத்திற்கு முன் திருத்தேர் விழா நடைபெறும்.

தீப தரிசனத்துக்காகக் கூடும் கூட்டத்தில் பரதேசிகள் மிகுதியாக இருப்பார்கள். "அண்ணாமலைக்கு அரோகரா" என்ற முழக்கம் காது செவுடுபடும்படி முழங்கும். சாதுக்களின் மாநாடு ஆண்டு தோறும் நடைபெறும். நாட்டுக் கோட்டை தனவணிகர்களுக்குத் திருவண்ணாமலையில் அளவற்ற அன்பு உண்டு. அவர்கள் ஏதேனும் கடிதம் எழுதினால் கீழே கை எழுத்து இடுவதில்லை. "வேணும் அண்ணாமலையார் துணை" என்றே எழுதி நிறைவேற்றுவார்கள். தீபத் திருவிழாவில் நகரத்தார் கூட்டம் அதிகமாக இருக்கும்.

உமாதேவியார் இறைவனைப்பூசித்து இடப்பாகம் பெற்று உவந்தது இத் தலம். அருணாசல புராணம், அருணகிரி புராணம் என்று இரண்டு நூல்கள் இத்தல சம்பந்தமாக உள்ளன. இது பஞ்சபூத தலங்களில் தேயு ஸ்தலம். மிகவும் அற்புதமான திருப்புகழ் பாக்களை பாடிய அருணகிரி நாதர் இத்தலத்தில் முருகவேளின் அருள் பெற்றார். கோயிலுக்குள் சிவ கங்கை என்னும் தீர்த்தம் இருக்கிறது. அந்த மண்டபத்தின் ஒவ்வொரு கம்பத்திலும் சிற்பங்கள் உள்ளன. ஒரு கம்பத்தில் முருகன் திருஉருவம் உளது. அதைச் சுற்றி கோவில் கட்டியுள்ளார்கள். கம்பத்தில் முருகன் இருப்பதால் அதற்கு "கம்பத்திளையனார் கோவில்" என்று பெயர். அருணகிரி நாதர் உலக வாழ்வை வெறுத்து கோபுரத்தின் மீது ஏறிக் கீழே விழுந்த போது முருகன் அவரை தாங்கிக் கொண்டு அருள் செய்து திருப்புகழ் பாடு என்று பணித்தான்.

திருக்கோயிலுக்குள் பாதாள லிங்கம் என்ற சந்நிதி ஒன்று உள்ளது. அது கீழே குகை போன்ற இடத்தில் உளது. ரமண மகரிஷிகள் சமாதி கூடியிருந்த இடம். ஞானச் சுடராக திகழ்ந்த அந்த மாமுனிவருடைய ஆசிரமம் இந்தத் தலத்தில் இருக்கிறது. பாதாள லிங்க கோவிலை செப்பனிட்டு கட்டியதை, ராஜாஜி அவர்கள் திறந்து வைத்தார்கள்.

பழைய கோவிலும் புதிய ஆசிரமும் விளங்குமிடம் திருவண்ணாமலை. குன்றின் மேல் இட்ட விளக்கை காண கூட்டம் கூட்டமாக பக்தர்கள் வரும் தலம் அருணாசலம். ஒவ்வொரு சிவாலயத்திலும் கர்பக்கிரகத்துக்குப் பின் லிங்கோத்பவ மூர்த்தியின் உருவம் இருக்கும். அது நான் முகனும் மாலும் தேட இறைவன் சுடராக நின்றதைக் காட்டுவது. திருவண்ணாமலையில் நடந்த அருள் விளையாட்டின் அடையாள உருவம் அது. ஆகவே எந்த இடத்தில் சிவாலயம் இருந்தாலும் அங்கே அண்ணாமலையின் சின்னமாகிய லிங்கோத்பவ மூர்த்தி இருக்கிறதென்றே சொல்லலாம். அதனால் தான் எங்கே அரோகரா போட்டாலும் "அண்ணாமலைக்கு அரோகரா" என்று முழங்குகின்றார்கள் போலும்!



தொடர்க் கட்டுரை :

## அத்தியாயம்-13

## க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்

பகுதி — 4

வேதாந்தத்தின்படி அறியாமையின் காரணமாகத் தோன்றியதே இந்த சரீரமாகும். பிறவிக்குக் காரணம் அவித்யை அல்லது அறியாமையேயாகும். அவித்தை அகன்று ஞானம் கை வரப் பெறுகையில் பிறவிப் பெரும்பிணி அகன்று ஒருவன் பிறப்பில்லாப் பெருநிலையை அடைய வல்லவனுகிறுன். சாங்கியத்தின் கருத்தை ஒட்டி வேதாந்தமும் சரீரத்தை பிரகிருதியின் ஒரு வெளிப்பாடகக் கருதினுலும், பிரகிருதி சரீரம் இரண்டுமே பொய்த் தோற்றங்களே. அதாவது மித்யையாகும். கைக்கு உட்பட்டது. ஜீவன் சரீரத்தின் மூலம் நல்லது செய்தால் புண்ணியமும், தீயது செய்தால் பாபமும் பெறுகிறது. அதற்கேற்ப இறைவனிடமிருந்து தண்டனையையோ அல்லது பாராட்டையோ பெறுகிறுன். ஆனுல் சாங்கியர்களது கருத்துப்படி பிரகிருதியின் வடிவமான சரீரத்தின் மேல் ஜீவாத்மனுன புருஷனுக்கு எவ்வித உரிமையும் கிடையாது. தனது இயல்பினுல் பிரகிருதி மாறுபாடுகளுக்கு உள்ளாகிறது. அதை ஜீவன் வெறுமனே சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறது. அவ்வளவுதான். சாங்கியர்கள் கடவுள் அல்லது பிரம்மத்தை ஏற்றுக் கொள்வதில்லை. அவர்களது கருத்துப்படி அறியாமையின் காரணமாகும் வரை பிரபஞ்சம் மெய்யாகத் தோன்றுகிறது. 'தான் எங்கும் நிறைந்த ஆத்ம சொரூபமே' என்ற உணர்வில் லயித்து விடுவதுதான் மோட்சமாகும்.

இந்த விதமாக ரிஷிகள் சரீரம் மற்றும் ஆத்மனைப் பற்றி அதாவது க்ஷேத்திரம்—க்ஷேத்ரக்ஞனைப் பற்றி பல விதங்களில் பல்வேறு கொள்கைகளை வகுத்துத் தந்திருக்கிறுர்கள். ஒவ்வொரு ரிஷியும் தன் கொள்கைக்கு ஆதரவாக வேதத்தை மேற்கோள் காட்டுகிறுர். பிரம்ம ஸூத்ரமும் வேதத்தையே ஆதாரமாகக் கொண்டுள்ளது. அது ஏனைய கருத்துக்களைத் தவறென்று சுட்டிக் காட்டி தனக்கேற்ற முறையில்




'மித்யை' என்பது இல்லையென்பதாகி விடாது. கனவில் எப்படி கனவு காண்பவனுக்குக் கனவுத் தோற்றங்கள் உண்மையாகத் தென்படுமோ, அதுபோல அக்ஞானம் அல்லது அவித்தையில் உழலும்வரை ஒருவனுக்கு இப்பிரபஞ்சம் மற்றும் சரீரம் யாவும் மெய்போலத் தோன்றும். ஆனுல் ஞானம் ஏற்பட்டதும் அவற்றின் பொய்த் தோற்றம் மறைந்துபோய் மெய்ப் பொருளான பிரம்மம் ஒன்றே எஞ்சி நிற்கிறது. விழித்தவுடன் கனவுப் பொருள்கள் மறைந்து போய் விடுவதில்லையா? அதைப்போல.

நியாய வைசேஷிகர்களது கருத்துப்படி சரீரம் ஜீவாத்மனின் ஆளுஒருவன் சரீரத்தை அதாவது பிரபஞ்சத்தை ஆன்மாவாகக் கருதுவதால் தான் இடர்ப்படுகிறுன். தான் இயற்கையிலிருந்து வேறுபட்ட அழியாத ஆன்மா என்பதை அவன் எப்பொழுது உணர்கின்றுனே, அந்த வினுடியே அவன் முக்தி அடைகிறுன்.

பிரம்ம ஸூத்ரங்களின்படி இவ்வுலகம் ஒரு மாயை. கிளிஞ்சலில் வெள்ளி போல, பாலைவனத்தில் கானல்நீர் போல, கயிற்றினில் பாம்பு போல இல்லாத ஒன்று அறியாமை காரணமாகஇருப்பதாகத்தெரிகிறது. கனவு நிலையில் உள்ள வரை கனவு உண்மையாகத் தெரிவது போல, மாயையின் பிடியில் அகப்பட்டிருக்க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞனைப் பற்றிய கருத்தை வெளியிடுகின்றது.

கிறிஸ்துவம், இஸ்லாம் மற்றும் யூத மதம் போன்றவை மனிதனை ஆன்ம-சரீரச் சேர்க்கையால் உருவான ஒரு வெறும் ஜீவனுகக் கருதுகின்றன. அவற்றின்படி ஒன்றின்றி மற்றது அபூர்ணமாகி விடுகிறது.

திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை

எனவே அவர்களைப் பொறுத்தமட்டில் செத்த உடல் மீண்டும் உயிர்த்தெழுந்து சொர்க்கத்தில் காத்திருக்கும் ஆன்மாவுடன் திரும்பச் சேருவதே மோட்சம் ஆகிறது. இதில்

வேடிக்கையான அம்சம் என்ன வென்றால் மரணத்திற்குப் பின்னர் உடலானது அழியாது அப்படியே இருக்கிறது என்னும் அவர்களது விந்தையான கருத்தேயாகும். இதை அடிப்படையாகக் கொண்டு தான் அவர்கள் உயிர் பிரிந்தபின் உடலைப் புதைத்து விடுகின்றனர். ஹிந்துக்களைப் போல் எரிப்பதில்லை.

கீதை முழுவதும் திரும்பத் திரும்ப படித்தால் ஒரு முக்கியமான கருத்து நமக்குப் புலப்படும். பகவான் கிருஷ்ணர் தாம் அர்ஜுனனுக்குச் சொல்லும் உயர் கருத்துக்களையெல்லாம் தாம் சொல்வதாகக் கூறாமல், 'இவ்விதம் அறிஞர் பெருமக்கள் கூறியுள்ளனர்', 'இது சான்றோரது கருத்து', 'இவ்விதம் ரிஷிகள் பாடிப் போயிருக்கின்றனர்' என்றே கூறுவதைக் காணலாம். இது எதைக் காட்டுகிறது? மற்ற சமயங்களைப் போல, 'இது இன்னாரால் சொல்லப் பட்டது. எனவே மற்றவர் அதை ஒப்புக் கொண்டேயாக வேண்டும்' என்று இல்லாது தர்க்கபூர்வமாகவும், எவ்வித ஐயத்துக்கும் இடமின்றிக் கூறப்பட்டிருப்பதால் ஒருவன் அதை அலசி ஆராய்ந்து ஒப்புக் கொள்வதற்கான சுதந்திரம் அளிக்கப்பட்டிருக்கிறது என்பதேயாகும். இந்து மதத்தின் தனிச் சிறப்பே இது தானே! நாஸ்திகனையும் ஒரு வகை பக்தனாக ஏற்றுக் கொள்ளும் உயர் பண்பை இந்து மதத்தில் அல்லாமல் வேறு எங்கே காண முடியும்! உணர்ச்சி, அறிவு இரண்டையும் ஒருங்கே பெற்று விளங்குபவன் மனிதன். இரண்டும் இணைந்து வளரும் போதுதான் அவன் பண்பட்டவனாகக் கருதப்படுகிறான். இந்த உணர்ச்சி, அறிவு இரண்டையும் ஒருங்கே வளர்த்தல் பொருட்டு வேத வேதாந்தங்களை நிறுவிய சான்றோர் இயல், இசை என்னும் யுக்தியை நன்கு முறையாகக் கையாண்டிருக்கின்றார்கள்.

யுக்திக்கு ஒவ்வாத உணர்ச்சி உண்மையான பக்தி ஆகாது. பக்தியின் பெயரால் சிலருக்கு உடனடியாகக் கண்களில் நீர் மல்கி விடும். ஆனால் அவர்களிடம் எந்தவித உறுதிப்பாட்டையும், மேலான அறிவையும் காண முடியாது. அடிக்கடி அத்தகையவர்கள் ஒன்றை விட்டு மற்றொன்றைப் பற்றிய வண்ணம் இருப்பர். வேறு சிலர் இரண்டும் வாய்க்கப் பெற்றவராயிருப்பர்.

(30-ம் பக்கம் பார்க்க)

# ★ கார்த்திகை தீபம் ★

சிவபெருமானின் அடிமுடி காணாது ஜோதி ஸ்வரூபம் தோன்றிய க்ஷேத்ரம் திருவண்ணாமலை ஆகும். கார்த்திகை மாதம் பௌர்ணமியன்று கார்த்திகை நக்ஷத்ரம் கூடிய நாளில் இறைவன் இவ்விதம் நின்றார். இறைவன் முப்புரங்களை எரித்ததும் இதே கார்த்திகை தினத்தில்தான்.

மஹாபலி என்ற அரக்கர் வேந்தன் அவ்விதம் பிறவி எடுக்கும் முன்பு ஒரு எலியாக இருந்தானாம். ஒரு சிவன் கோவிலில் அணையும் தறுவாயில் இருந்த தீபத்தை ஒளிரும் படியாக இந்த எலி தன்னையும் அறியாமல் செய்து விட்டதாம். இதன் பலனாக மஹாபலி என்னும் சக்ரவர்த்தியாக அந்த எலி அடுத்தப் பிறவி எடுத்ததாம். இந்த புண்யத்தை அறியா ஜீவனான அந்த எலி செய்த தினம் கார்த்திகை திருநாளாகும்.

கார்த்திகைத் திருநாளில்தான் கந்தக் கடவுளான முருகப் பெருமான் அவதாரம் செய்ததாகக் கூறுவர். எனவே கார்த்திகைப் பெண்டிர் அறுவரால் வளர்க்கப் பெற்ற கார்த்திகைச் செல்வனான முருகனுக்கு உகந்ததாகக் கார்த்திகைப் பண்டிகை கொண்டாடப்படுகிறது.

பவிஷ்யோத்தர புராணம் கார்த்திகை திருநாளையும் முருகனையும் இணைத்துக் கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

''கார்த்திக்யாம் க்ருத்திகாயோகே
ய: குர்யாத் ஸ்வாமி தரிசனம
ஸ்வாமித்வம் ப்ராப்ய ஸர்வேஷாம்
ஸ்வாமி லோகம் அவாப்னுயாத்
க்ருத்வாவா தீபமேகம் து ஸ
கோடிகுல முத்தரேத்''

கார்த்திகை மாதம் கார்த்திகை நக்ஷத்திரத்தன்று முருகனை தரிசிப்பவன் உலகங்கட்கெல்லாம் தலைவனாகி கைலாஸம் செல்வான். ஸ்வாமி மலையில் உள்ள ஸ்வாமி நாதனுக்கு அன்று தீபப் பந்தம் பிடித்தானேயாகில் கோடிக்கணக்கான தன் தலைமுறை பித்ருக்களை கரை ஏற்றியவனாகிறான். மேலும்,

''ஸ்வாங்க ப்ரதக்ஷிணம் க்ருத்வா
மனோ பீஷ்டம் அவாப்னுயாத்''

அன்று முருகன் ஸன்னிதியில் அங்க ப்ரதக்ஷிணம் செய்பவன் கோரிய பொருள் எதுவாயினும் அதை அடைகிறான் என்றும் கார்த்திகையின் பெருமையை பவிஷ்யோத்தர புராணம் பலவாறும் கூறுகிறது.

கார்த்திகையன்று சொக்கப்பனைக் கொளுத்துவது முப்புரங்களை இறைவன் எரித்ததை நினைவூட்டுதன் பொருட்டேயாகும். மஹாபலியை வாமனமூர்த்தி திரிவிக்ரமராகித் தலையில் மூன்றாவது அடி வைத்து அழுத்திப் பாதாளத்திற்குச் செலுத்திய நாளே கார்த்திகை என்பாரும் உண்டு. மஹாபலிக்கு வெப்ப நோய் ஏற்பட்டு கார்த்திகை தீப விழாவை அனுசரித்து தம் நோய் போக்கிக் கொண்டாரென்று வரலாறுமுண்டு. துர்க்காதேவி மஹிஷாசுரனுடன் போர் செய்கையில் ஒரு சிவலிங்கத்தைத் தவறுதலாக உடைத்து விட்டதற்கு பரிகாரமாகக் கார்த்திகை தீப விழாவைக் கொண்டாடினாள் என்றும் ஒரு செவிவழிக் கதையும் உண்டு.

குன்றில் இட்ட விளக்குப் போல என்றொரு பழமொழி உண்டு. நிலநூல் நால்வகை மலைக்குன்றுகளைக் கூறுகையில் ''இக்னியஸ்ராக்', எனப்படும் அக்னிக் குன்றையும் கூறும். திருவண்ணாமலையை அக்னித்தலம் என்பார்கள். அண்ணாமலைத் தீபம் திருவண்ணாமலைக் குன்றில் கார்த்திகையன்று ஏற்றி வைக்கப்பட்டு பல மைல்கள் தூரம் ஒளி பரப்புகிறது. 'உமையாளொடும் உடனாய ஒருவன்' என்று அண்ணாமலைப் பெருமானை சம்பந்தர் பரவுகிறார். எட்டுக் கல் தொலைவு உள்ள அண்ணாமலைத் திருச்சுற்றில் 400 லிங்கங்களும், 360 தீர்த்தங்களும் இருப்பதாகப் புராணம் கூறும். இத்தலத்தை சம்பந்தர், அப்பர், மணிவாசகர் பாடியுள்ளனர். அருணகிரிநாதர் இங்குதான் வசித்தார். குகை நமசிவாயர், ஈசான தேவர் வல்லாள ராஜன், சேஷாத்ரி சுவாமிகள், ரமண மஹரிஷிகள் போன்ற மஹான்கள் வசித்த இடம் திருவண்ணாமலைத் திருப்பதியாகும். வடமொழி நூல்களான ஸூத ஸம்ஹிதை, சிவபுராணம் ஆகியவையும், தேவாரம், திருவாசகம், திருப்புகழ், பெரிய புராணம், கந்தபுராணம், அருணாசல புராணம் ஆகியவையும் திருவண்ணாமலையையும், இதில் நடைபெறும் கார்த்திகைப் பெருமையினையும் பலபடியாகக் குறிப்பிடுகின்றன.

திரு. பி. சுந்தரராமன் எம்.ஏ.பி.இட்.,
பழமார்நேரி.

கார்த்திகை தீப விழா மிகப் பழங்காலம் தொட்டு தமிழர்களிடம் இருந்திருக்கிறது. நச்சினார்க் கினியர், 'கார்த்திகைத் திருநாளில் ஏற்றிய விளக்கு' என்று குறிப்பிடுகிறார். கார் நாற்பது என்ற நூலும் கார்த்திகை தீபத்தைப் பெருமையாகப் பேசுகிறது.

கார்த்திகை தீபத்தை உரைக்கும் ராஜேந்திர சோழன் கல்வெட்டு ஒன்று காளஹஸ்தி ஆலயத்திலும், கிருஷ்ண தேவராயர் சாசனம் ஒன்று தேவிகாபுரத்திலும் காணக் கிடைக்கிறது.

இன்பம் நிறைந்த கார்த்திகை நாளில் முருகப் பெருமானின் பொன்னடி போற்றி சுற்றி நிற்கும் துயரங்களைக் களைந்தெறிவோமாகுக!






டாக்டர் கே. சர்வோத்தமன்
திருப்பதி.

அரங்கநாதனை வழிபட்ட ஆண்டாள் போல், கைலைநாதன்பால் காதல் கொண்ட காரைக்கால் அம்மையார் போல், திருவேங்கடத்தானிடம் தீவிர பக்தி வைத்து வாழ்ந்த புனிதவதி தரிகொண்ட வெங்கமாம்பா ஆவர்.

சித்தூர் மாவட்டம் வாயல்பாடு தாலுக்கா 'தரிகொண்ட' என்ற சிற்றூரில் திருவேங்கடத்தானின் அருளினால் கிருஷ்ணய்யா என்ற அந்தணருக்குப் பிறந்தவர் வெங்கமாம்பா.

# தரிகொண்ட வெங்கமாம்பா

காரைக்கால் அம்மையார் போல் இவரும் இளம் பருவத்திலிருந்தே கடவுளின்பால் காதல் கொண்டாள். எவ்வப்பொழுதும் பெருமானை நினைத்து நினைத்து உருகத் தொடங்கினாள். திருமாலின் எண்ணற்ற லீலைகளைப் பாடிப் பாடி மகிழத் தொடங்கினாள். வெங்கமாம்பாவின் இச் செயல் தந்தை கிருஷ்ணய்யாவுக்கும், குடும்பத்தாருக்கும், சுற்றத்தினருக்கும், ஊராருக்கும் பெரும் வியப்பு தந்தது. வயது வளர வளர அவருடைய பக்தி வளரத் தொடங்கியதே ஒழிய குறைய வில்லை. தந்தை கவலைக்குள்ளானார். ஒரு பெண் குழந்தை வேண்டும் என்று தவித்தது உண்மைதான். ஆசைக்குப் பிறந்த பெண்ணுக்குக் கல்யாணம் செய்வித்து அவள் சீரும் சிறப்பாக குழந்தை குட்டிகளோடு வாழ்வதைத்தானே பெற்றோர் விரும்புவர். ஆதலின் அவர், கல்யாணம் செய்வித்தால் எல்லாம் சரிப்பட்டுவிடுமென நினைத்து அவ்வண்ணமே செய்தார். ஆனால் காரைக்கால் அம்மையார் போலவே அன்னாருக்கும் குடும்ப வாழ்க்கையில் பற்று ஏற்படவில்லை. கணவனும் வெங்கமாம்பாவின் முகத்தில் சுடர்விட்டு ஒளிரும் ஞான ஒளியைக் கண்டு அணுக அஞ்சினார். ஐந்து வருடங்கள் கழிந்தன. அவரும் இயற்கை எய்தினார்.

வெங்கமாம்பாவின் வாழ்க்கையில் இது ஒரு திருப்பம். வெங்கமாம்பாவின் செயல்கள் கிராமத்தாரைச் சினுக்க வைத்தது. உலகத்தாரின் வாழ்க்கைக்கு ஒவ்வாத வகையில் பாடுவதும், ஆடுவதும் சுமங்கலி வேடத்துடன் திகழ்வதும் அவ்வூராருக்கு மிகவும் கோபத்தை ஊட்டியது. 'கலிகாலம்' என்றனர் சிலர். பேய் பிடித்தது என்று ஒதுங்கி நின்றனர் சிலர். பெண்ணுக்கு இவ்வளவு திமிரா என்று பதைத்தனர் சிலர். ஏதாவது தீங்கு செய்தால் நமக்கேதேனும் கேடு விளையுமோ என்று பயந்தனர் சிலர். வெங்கமாம்பாவிடம் நயமாக சொல்லிப் பார்த்தனர். பயனில்லை. ஆதலால் அவர்கள் தம் மட குருக்களுக்கு எல்லாம் எடுத்து உரைத்தனர். அவரும் சீடர்களுடன் ஒரு முறை அவ்வூருக்கு வந்தார். கிராமத்தார் எல்லோரும் அவருக்கு வைபவத்துடன் வரவேற்பு அளித்தனர். அங்கே வெங்கமாம்பாவையும் வரவழைத்தனர். ஒரு திரைப் போட்டு அங்கே நிற்கச் செய்தனர். யாவரும் பக்தியுடன் குருக்களுக்கு வணங்கினர். ஆனால் வெங்கமாம்பா வணங்கவில்லை. 'என்ன ஆணவம்' எனக் கொதித்து எழுந்தனர் பெரியவர்கள். 'என்ன நடக்கும் பார்க்கலாம்' எனத் தூரத்தில் நின்றனர் இளைஞர்கள். 'என்ன ஆகுமோ' எனக் கண்ணீர் கலங்கப் பார்த்தனர் பெண்கள். மட குருக்கள் நிலைமையை உணர்ந்தார். தான் சும்மா இருந்தால் யாவருக்கும் மன அமைதி கெட்டு விடுமென நினைத்து,

"அம்மா! பாருங்கள். உம்மைப் பற்றி எல்லாம் கேட்டோம். உலக ஆசாரம் என்பது ஒன்று இருக்கிறதல்லவா? இங்கே யாவரும் என்னை வணங்க ஏன் நீ வணங்கவில்லை". என்று கேட்டார்.

"அய்யா! தாங்கள் மதிப்பிற்கு உரியவர். தாங்களை அவமானபடுத்துவது என் எண்ணம் அல்ல. தாங்கள் சிம்மாசனத்தை விட்டு அகலுங்கள். நான் வணங்கினால் கேடு விளையும்" என்றார்.

குருக்கள் சில நிமிடங்கள் ஆலோசித்தார். பிறகு தூர நின்றார். வெங்கமாம்பா சிம்மாசனத்தை வணங்கவே அது யாவரும் நோக்க எறிந்து சாம்பலாயிற்று. யாவரும் பயந்து ஒதுங்கலாயினர். குருக்கள், "அம்மா! தாங்கள் மானிடப் பிறவியல்ல, பிரஹலாத அவதாரம். நீங்கள் தெய்வப்பிறவி. உங்களால் பக்தி நெறி வளரும்" என்று கூறினார். இச் சம்பவம் நடந்த பிறகு உள்ளத்தை அறியாத மக்களுடன் வாழ்வதைவிட உலகளந்த உத்தமனாகிய திருவேங்கடவனை தொழுவது மேல் என திருமலை அடைந்தார் வெங்கமாம்பா.

வெங்கமாம்பாவின் மகிமைகள் பல சொல்லப்படுகின்றன. அவற்றில் சிலவற்றைக் காண்போம். வெங்கமாம்பா ஒவ்வொரு நாளும் ஆலயத்தினுள் சென்று கற்பூர ஹாரதி கொடுப்பது வழக்கம். ஆரத்தியெடுத்து அங்கே நின்று பாடிவிட்டு வீட்டுக்குப் போவது அவருடைய அன்றாட தொழுகையில் ஒன்று. ஆனால் கோவில் அர்ச்சகர்களுக்கு அவருடைய இப் பணி பிடிக்கவில்லை. ஒரு நாள் சுவாமிக்கு அபிஷேகம் முடிந்தது. அலங்காரம் பூர்த்தி ஆயிற்று. அப்போது வெங்கமாம்பா அங்கு வந்தார். முதன் முதலில் பெருமாளுக்கு விதவையின் ஆரத்தி எடுப்பதா என்ற கோபத்தினாலும், எப்படியாவது இவ்வழக்கத்திற்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும் என்று நினைத்து அர்ச்சகர்கள் 'இன்று செல்லுங்கள். நாளை வாருங்கள்' எனச் சொல்ல நினைத்தனர். வெங்கமாம்பா, அவர்களின் அந்தரங்கத்தை அறிந்து ஒன்றும் கேட்காமல் சுவாமியைத் தொழுது வீடு சென்றார். மறுநாள் சுவாமியின் தேர்த் திருவிழா. தேர் ஆலய வீதிகளின் நகரத் தொடங்கியது. பக்தர்கள் 'கோவிந்தா' முழக்கம் இட்டபடி தேர் இழுக்கலாயினர். ரதம் வடக்கு மாட வீதியில் நகர்ந்து கொண்டு இருந்தது. ஆனால் ஒரு இடத்தில் அத்தேர் நின்று விட்டது. அர்ச்சகர்கள் என்ன வாயிற்று என்று கேட்டனர். தாமும் சேர்ந்து இழுக்கலாயினர். முடியவில்லை. குதிரை, யானை, மக்கள் கூட்டத்தினாலும் அது நகரவில்லை. பயன் வீணாயிற்று. இருட்டு கவ்வத் தொடங்கியது. அர்ச்சகர்கள் ஒன்றும் செய்ய இயலாமல் ஆகாயத்தை நோக்கலாயினர். அப்பொழுது அவருள் ஒருவருக்கு முன் தினம் வெங்கமாம்பா ஆரத்தியை பறித்தது நினைவுக்கு வந்தது. ரதம் வெங்கமாம்பாவின் வீட்டுக்கு முன் நிற்பதும் அப்பொழுதுதான் கண்டனர். உடனே அவர்கள் உள்ளே சென்று அடிபணிந்து தங்களுடைய தவறுகளை மன்னிக்க கை கூப்பி நின்றனர். அவர்களைப் பார்த்து,

'அய்யா! நான் யார். நான் ஒரு மானிடப்பிறவி. நான் அனுமதி கொடுத்தால் ரதம் நகருமா' என்றார். "ஆம். கட்டாயம் நகரும். சுவாமியைச் சீக்கிரம் கோவிலுக்கு எழுந்தருளச் செய்ய வேண்டும்" எனப் பணிவுடன் கேட்டுக் கொண்டனர். உடனே வெங்கமாம்பா தெருவில் நின்று சுவாமிக்கு ஆரத்தி எடுத்தார். ரதம் நகர்ந்தது.

வெங்கமாம்பாவின் திருமால் காதலைப்பற்றியும் மற்றொரு கதை உளது. ஒவ்வொரு நாளும் திருமால் ஏகாந்த சேவை முடிந்ததுடன் வெங்கமாம்பாவின் வீட்டிற்கு எழுந்து அருளுவாராம். பொழுது விடியும் வரை வெங்கமாம்பாவிடம் பேசிக் கொண்டு இருப்பாராம். வெங்கமாம்பா அவருடன் வாதம் புரிவாராம். ஒரு நாள் வாதம் வளர்ந்தது. பொழுது விடியத் தொடங்கியது. கோவிலில் 'சுப்ர பாதம்' தொடங்கியது. தான் செல்வதற்காகச் சுவாமி நின்றார்.

"என் பிரச்சனைக்குச் சமாதானம் சொல்லாமல் போகவிடமாட்டேன்" என்று வெங்கமாம்பா அடம் பிடித்தாள். பீதாம்பரம் பாதி கிழிந்தது. சுவாமி சென்றுவிட்டார். கோவில் அர்ச்சகர்கள் கிழிந்த பீதாம்பரத்தைப் பார்த்தனர். உடனே தேவஸ்தான அதிகாரிகளுக்கு இதைத் தெரிவித்தனர். அவர்களும்,

'இதில் ஏதோ தேவ ரகசியம் உள்ளது. பகவானின் பொருள் பக்தர்களுடத்தில்தான் இருக்கும். தேடுங்கள். கட்டாயம் கிடைக்கும்' என்றனர்.

அர்ச்சகர்கள் அங்கும் இங்கும் தேடினர். கிடைக்கவில்லை. அவருள் ஒருவர் 'வெங்கமாம்பாவைவிட சிறந்த பக்தர்கள் யார் இருப்பார். அவரைக் கேட்போம்' என்று கூறினார். அர்ச்சகர்களும் தேவஸ்தான அதிகாரிகளும் வெங்கமாம்பாவின் வீடு சேர்ந்தனர். தங்களின் ஐயத்தைக் கூறினர். வெங்கமாம்பா பாதி பீதாம்பரத்தைக் கொடுத்தார். சுவாமியுடன் பேசியதும், வாதம் புரிந்ததும் கேட்டு அவர்கள் மெய்சிலிர்க்க வாய் திறந்து நின்றனர். பிறகு வெங்கமாம்பா 'தும்புர தீர்த்தம்' என்னும் இடத்தில் வாழ்ந்து தானாகக் கேட்டு திருமாலுடன் ஐக்கியமானாள்.

வெங்கமாம்பா துறவி மட்டும் அல்ல. யோகம் தெறிந்தவர். வடமொழி, தெலுங்கு கற்றவர். அவர் வேங்கடாசல மாஹாத்மியம், ராஜ யோகசாரம், முக்தி காந்த விலாசம் மற்றும் பல வேதாந்த கீர்த்தனைகளை எழுதினார். அவற்றுள் ஒன்றின் பொருள் பின்வருமாறு:

"உலகில் மானிடப் பிறவி எடுப்பது அரிது, அதிலும் புருடனாகப் பிறப்பது கடினம். புருடனாகப் பிறந்தாலும் நல்ல மனைவி வாய்ப்பது கடினம். வாய்த்தாலும் செல்வம் செழிக்காது. குழந்தைவளம் பெருகாது. இச்செல்வம் பெருகினாலும் தான குணம் இருக்காது. தான குணம் இருந்தாலும் சாந்தம் நிலைக்காது. சாந்தமிருந்தாலும் சத்திய மனப்பான்மை இராது. சத்தியம் இருந்தாலும் அரியைத் துதிப்பது அரிதே. அரியை நினைப்பவன்தான் பரமயோகி."

இன்றும் திருமலையில் திருவேங்கடத்தானின் கைங்கர்யங்களில் 'வேங்கமாம்பா ஹாரதி' உண்டு. அதை 'முத்யால ஹாரதி' என்று கூறுவர். ஏகாந்த சேவை வேளையில் இந்த ஆரத்தி எடுக்கப்படும்.








# தியாகம்



**'மீனம்'**

(வாழ்க்கையில் சில சமயம் தர்ம சங்கடமான நிலைகள் அல்லது அற நெறிச சிக்கல்கள் ஏற்படுவதை நாம் அவ்வப்போது பார்த்துக் கொண்டு தான் இருக்கின்றோம். இருபுறமும் நியாயமாகவே தோன்றும் அவற்றைத் தீர்க்கும் வகையறியாது நாம் குழப்பமடைகிறோம். ஆனால், ஆன்றோர்கள் தமது அரிய தியாகத்தினால் அறம் வழுவாது அச்சிக்கல்களை விடுவித்திருப்பதை நமது புராணங்களில் காணப்படும் சுவையான நிகழ்ச்சிகள் பல தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன. புகலடைந்த புறாவிற்குத் தஞ்சமளித்துக் காப்பாற்றியதை விவரிப்பது சிபியின் கதை. தியாகத்தினால் மட்டுமே இறவாமை கிட்டுகிறது என்பது பெரியோர்களின் வாக்கு அன்றோ!)

சிபி மாபெரும் சக்ரவர்த்தி. உசீனரன் என்னும் அரசனின் மைந்தன். பெரும் வள்ளல் எனப் புகழ் பெற்றவன். அறநெறி தவறாது ஆட்சி புரிந்தவன். அவன் ஆட்சியில் மக்கள் கவலை எதுவுமின்றி இன்பமாக வாழ்ந்து வந்தனர்.

ஒரு நாள் காலைப் பொழுது, புரோகிதர் அருகில் இருக்க, சிபி காலை வணக்கத்தை முடித்திருந்த சமயம். எங்கிருந்தோ ஒரு வல்லூறு புறா ஒன்றைத் துரத்திக் கொண்டு வந்தது. புறாவோ நடுங்கிக்கொண்டே சிபியின் மடியில் வந்து சாய்ந்தது. சிபி திகைப்புடன் மேலே நோக்கினான். வல்லூறு வட்டமிட்டுக் கொண்டே இருந்தது.

"அரசே! இப்புறா தன் உயிருக்குப் பயந்து தங்களைப் புகலடைந்துள்ளது," என்று புரோகிதர் அரசனிடம் கூறினார்.

ஒரு பிராணிக்கு உயிரைவிடச் சிறந்தது எதுவுமில்லை; அங்ஙனமே உயிர்ப்பிச்சை அளிப்பதைக் காட்டிலும் உயர்ந்த தருமம் எதுவுமில்லை.

புறா மனித மொழியில் பேசத் துவங்கியது:

"மன்னவனே! நான் ஒரு முனிவன். பிரம்மச்சரிய நியமத்துடன் வேதங்களைப் பயின்று, பாவமில்லாத உயரிய யோக சக்திகளைப் பெற்றவன். பறவை உருக்கொண்டேன். இவ்வல்லூறு என்னைத் துரத்தியது. மன்னுயிரைத் தன்னுயிராக மதித்து வரும் உன்னையே புகலடைந்தேன். என்னைக் காப்பாற்ற வேண்டும்."

வியப்படைந்திருந்த வேந்தனைப் பார்த்து வல்லூறு "அரசே, இதற்குப் பாதுகாப்பு அளித்து எனது இயற்கையான உணவிற்கு நீ இடைஞ்சலாக வருவது நியாயமில்லை. வாயருகிலுள்ள உணவைப் பறிப்பது தர்மமாகாது; உன்னைப் போன்றவருக்கு அது தகாது" என்று விண்ணப்பித்தது.

மனித மொழியில் பறவைகள் பேசியது சிபிக்கு மிகுந்த வியப்பை உண்டாக்கியது. அவனுக்கு இப்போது ஓர் இக்கட்டான நிலை ஏற்பட்டது. பிராண பயத்துடன் புகல் தேடி வந்திருப்பவர்க்குப் பாதுகாப்பு அளிக்காவிட்டால் நாட்டில் உரிய காலத்தில் மழை பெய்யாது; பஞ்சம் உண்டாகும்; சிறு வயதிலுள்ளவர் மரணமடைவர்; நாடு தேவர்களின் சீற்றத்திற்கு ஆளாகும். ஆனால், இயற்கை நியதியின்படி வல்லூறு புறாவை உணவிற்காகத் துரத்திக் கொல்வதும் ஒரு வகையில் நியாயமே ஆகும்.

இவ்வாறு ஓடியது அரசனின் சிந்தனை. சற்று யோசித்து அவன் வல்லூறினிடம் சொன்னான் :

"பறவையரசே! உனது பசியைத் தீர்த்துக் கொள்வதற்காக நீ செய்யும் முயற்சி நியாயமானதே ஆகும். ஆனால், அதே சமயத்தில் தஞ்சமடைந்தோரைக் காத்து ரட்சிப்பதும் அரசனுடைய கடமையாகும். எனவே, ஒன்று செய்கிறேன். உன் பசியைத் தீர்க்கும் பொருட்டு இப்புறாவைவிடச் சிறந்த உணவை எனது சேவகர்கள் உனக்குத் தருவார்கள். நீ தங்கி இளைப்பாறுவதற்காக நல்லதோர் இடமும் ஏற்பாடு செய்வார்கள். இப்புறாவைவிட்டு விடு!"

"அரசே! சமைக்கப்பட்ட உணவோ, புறாவைவிடச் சிறந்ததான உணவோ வேண்டும் என்று நான் கேட்கவில்லை. இது இயற்கை எனக்கு அளித்த உணவு. ஆதலால், இந்த இன்சுவை உணவையே எனக்குக் கொடுத்துவிடு" என்று வல்லூறு வாதாடியது.

சிபியோ 'புறாவையும் காப்பாற்ற வேண்டும்; வல்லூறின் பசிக்கும் உணவு அளிக்க வேண்டும்' என்று மனத்தில் எண்ணியவனாக, அதனிடம் பணிவுடன் வேண்டினான். "எருதுத் தொடையின் மாமிசம், இனிய மூலிகைகள் நிரம்பவும் ஊட்டம் தருபவை. அவற்றுள் எதைக் கேட்டாலும் உனக்குத் தருகிறேன்.

(26-ம் பக்கம் பார்க்க)

# குறுக்கெழுத்துப் புதிர்



திரு. S. G. சேஷகிரி
கோயம்புத்தூர்.



| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | 2 | 3 | | X | 4 | | |
| | X | 5 | | X | 6 | | | |
| | 7 | | | 8 | | | X | X |
| | | | | | | | X | 9 |
| 10 | | | X | X | | | 11 | |
| X | | X | 12 | | | X | | |
| 13 | | | X | X | X | 14 | | |
| | | X | 15 | | | | X | |
| | X | 16 | | | | | | |

## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. தமிழ் கூறும் நல்லுலகிற்கு வட எல்லை——
4. இந்து சமத்திற்கு முதல் நூலாம் வேதங்கள்——
5. தவறல்ல
6. இஷ்ட தெய்வத்தை——, நாயகி, தாய், தந்தை குரு, தோழன், பிள்ளை, எஜமான் சேவகன் என்று பல பாவங்களால் வழிபடுதல் வழக்கம் என்று இந்து சமய சாத்திரங்கள் கூறுகின்றன.
10. ——அறிந்து தீது இன்றி வந்த பொருள்தான் மேன்மை தரும் என்பது வள்ளுவர் வாக்கு
12. சிவ——, முருகன்
13. சிவனுடைய——, தரும தேவதையான நந்தி
14. ——நதியில் நீராடி ஐயப்பனைக் காணச் செல்வர்
15. ——வேத வியாசர் சொல்ல விநாயகரால் எழுதப்பட்டது.
16. ——எனப்படுவது சைவ சமய மூல மந்திரம்.

### மேலிருந்து கீழ்

1. ஸ்ரீமத் இராமாயணம்—— தத்துவத்தை விளக்கிக் கூறும் ஒரு நூல் ஆகும்.
2. ——இராமனைப் பிரிந்த துயரில் மூழ்கி மாண்டான்.
3. மீராப் பிரபு ——, கண்ணன்.
4. சைவ அடியார்களை —— என்பர்.
6. சிவன் உறைவிடம் திருக்கயிலாயம் —— உறைவிடம் திருப்பாற்கடல்.
7. —— சென்ற விடமெல்லாம் சிறப்பு.
8. சிறையிருந்த செல்வி ——யின் பெருமையைக் நூல் இராமாயணம்.
9. திருமலை திருவேங்கடமுடையான் திருச்சந்நதியில் முதல் ஆராதனை —— எனும் திருப்பள்ளி யெழுச்சி பூசனையாகும்.
11. "நீ எதற்கு? உன் —— தரும் பலம் இருந்தாலே போதும்!" என்று பகவானைக் குறித்து ஸ்ரீ புரந்தர தாசர் பாடுகிறார்.
13. —— நீர் நிறைந்தற்றே, பேரறிவாளன் பெற்ற செல்வம் பிறருக்குப்பயன்படும் என்கிறார் வள்ளுவர்.

---

## குறுக்கெழுத்துப் புதிர் விடைகள்

### இடமிருந்து வலம்

| | | | |
|---|---|---|---|
| 1. | சப்தகிரி | 12. | பாலன் |
| 4. | நான்கு | 13. | ஊர்தி |
| 5. | சரி | 14. | பம்பா |
| 6. | நாயகன் | 15. | பாரதம் |
| 10. | திறன் | 16. | பஞ்சாட்சரம். |

### மேலிருந்து கீழ்

| | | | |
|---|---|---|---|
| 1. | சரணுகதி | 7. | கற்றவர்கு |
| 2. | தசரதன் | 8. | சீதை |
| 3. | கிரிதாரி | 9. | சுப்ரபாதம் |
| 4. | நாயன்மார் | 11. | நாமம் |
| 6. | நாராயணன் | 13. | ஊருணி. |

(24-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆனால், புருவை மட்டும் விட முடியாதவனாக இருக்கிறேன். புகலடைந்தோரைக் காப்பது அரசனின் கடமை. இந்த சுய தர்மத்தை முறையோடு கடைப்பிடிக்க வேண்டும். பசித்தோருக்கு உணவு தர வேண்டியதும் எனது கடமையே ஆகும். எனவே, நீ வேறு எந்த வகை உணவு கேட்டாலும் கொடுப்பதற்குச் சித்தமாயிருக்கிறேன். எனது கடமையைச் செய்வதற்கு நீயும் உதவி புரிய வேண்டும்.''

அதைக் கேட்ட அவ்வல்லூறு கூறியது. "அரசே! ஒன்று செய்தால் உனது கோரிக்கைக்கு இணங்குகிறேன். புருவின் எடைக்குச் சமமான மாமிசத்தை உனது வலது தொடையிலிருந்து அறுத்துக் கொடு. அப்போது உனது தர்மமும் காப்பாற்றப்படும்; எனது பசியும் தீரும்.''

சிபியோ அதற்கு உடனே மகிழ்ச்சியுடன் இணங்கினன். உடனே ஒரு தராசைக் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்தான். தராசின் ஒரு தட்டில் புருவை வைத்து, தனது தொடையைக் கிழித்து, மாமிசத்தை அறுத்து, மற்ருெரு தட்டில் அதை வைத்தான். தராசு சமநிலைக்கு வரவில்லை. மேலும் சிறிது மாமிசத்தை அறுத்து வைத்தான். புருவின் தட்டு கீழே இருந்தது.

எத்தனை மாமிசம் வைத்தாலும் புருவின் எடைக்கு அது ஈடாக வில்லை. வரிசையாக ஒவ்வோர் உறுப்பாக அறுத்து அறுத்துத் தராசுத் தட்டில் வைத்தான் சிபி. அப்போதும் கூடப் புரு கனமாகவே இருந்தது! அவையிலிருந்தோர் அனைவரும் பெரிதும் வியப்படைந்தனர்.

சிபியோ இனிப் பயனில்லை என்று எண்ணி, தானே தராசுத் தட்டின மீது அமர்ந்தான். தராசும் சமநிலைக்கு வந்தது. புரு காப்பாற்றப் பட்டுவிட்டது எனச் சொல்லி வல்லூறு உயரப் பறந்து போயிற்று. அப்போது சிபி புருவை வணங்கிக் கூப்பிய கரங்களுடன் "தாங்கள் நிச்சயமாக ஒரு வெறும் சாதாரணப் புருவாக எனக்குத் தோன்றவில்லை. தாங்கள் யார்?'' என்று கேட்டான்.

அப் புரு உடனே அக்னி தேவனின் உருவைப் பெற்றது. "மன்னனே! நான் அக்னி தேவன். அவ் வல்லூறுவும் ஒரு தேவனே: வஜ்ராயுதத்தையுடைய தேவேந்திரனே அவ் வல்லூறு. தியாகத்தின் பெருமையை எடுத்துக் காட்டவும், தியாகமே மனித வாழ்க்கையை மேம்படுத்துகிறது என்பதை விளக்கவும் தியாகம் செய்தாவது தர்மத்தை நிலை நிறுத்த வேண்டும் என்பதை உன் மூலமாக உலகுக்கு உணர்த்தவுமே நாங்கள் இவ்வுருக் கொண்டு வந்தோம். தியாக வாழ்வே அனைத்திலும் சிறப்பானது'' என்றுகூறி, புரு சிபியை ஆசீர்வதித்து மறைந்தது.

தியாகத்தினுல் புகழ் அடைந்த சிபியின் கதை உயர்வாழ்வு வாழ விரும்பும் மனிதனின் வெற்றிக் கதை அல்லவா?

★

# குழந்தை உலகம்

திரு. பொன். சௌரிராஜன் - திருப்பதி.

எல்லாம் உங்கள் உலகானுல்
இழிவு ஏது ஏய்ப்பேது
பொல்லாக் கொடுமை பொய்யேது
பொறுமை ஏது போரேது

உண்மை சொன்னுல் உம்போல
உடனே உணர்வார் எவருண்டு
திண்மை கொண்டு திடங்கொண்டு
தீமை எதிர்ப்பார் எவருண்டு

நாளும் தீமை செய்தாலும்
நாளில் மறந்து புதியவராய்
வாழும் வகையை உம்போல
வாழ்வில் கண்டார் எவருண்டு

செல்வம் வறுமை நீர்அறியீர்
சிறந்த அன்பு தாமறிவீர்
கள்ளம் கவடு நீர்அறியீர்
கறந்த பால்போல் உளமுடையீர்

சோம்பல் ஒன்றும் நீர்அறியீர்
சொத்தை வாழ்வும் தாமறியீர்
தேம்பல் இன்றி கண்காணும்
தெய்வம் போல ஆடிடுவீர்

சாதி அற்ற உலகம் பொய்ச்
சாட்சி அற்ற உமதுலகம்
வாதி அற்ற துமதுலகம்
வாத மற்ற துமதுலகம்

எல்லாம் உங்கள் உலகம்போல்
ஏனோ இன்னும் ஆகவில்லை
பொல்லாக் கொடுமை பொய்யோடு
போரும் ஏனோ போகவில்லை



# இல்வாழ்க்கை

(ஜி. சுந்தரமய்யர்)

பாயிரம் முடிந்த பின்பு இல்லறத்தின் இயல்பைக் கூறத் தொடங்கி முதல் முதலில் இல்வாழ்க்கை குறளில் அமைக்கப்பட்டது. நமது நாட்டிலும் பிறவிடங்களிலும் மனிதர்களில் பெரும்பான்மையோர் ஒரு துணைவியோடு இருந்து வீட்டில் வாழ்ந்து வருவது உலக இயற்கையாதலால் முதல் முதலில் அதைப் பற்றிக் குறள் பேசத் தொடங்கிற்று. வேறு சிறப்பான காரணம் ஏதாவது இருக்க வேண்டும் என்று தேடிப் பொருந்தாக் காரணங்களைக் காட்ட எனக்குத் துணிவில்லை. பெரும்பாலோராலும் பேணப்பட்ட இல்வாழ்வை எப்படி நடத்த வேண்டும் என்பதைச் சொல்ல வள்ளுவனார் கருதி இவ்வதிகாரத்தை அமைத்தாரேயொழிய இல்லறமே யாவற்றினும் சிறப்புடைத்து அல்லது மேம்பட்டது என்று கருதி இவ்வதிகாரத்திற்கு முதல் ஸ்தானம் கொடுத்ததாகத் தோன்றவில்லை.

அச்சுப் பதக்கங்களிற் காணும் வரிசையோடிங்கு பல வினாக்களை எழுப்புவதால் பரிதியார் ஒழுங்கைக் கொள்ளுவது நலமெனக் கூறல் தவறாகாது. ஆகவே அதைக் கொண்டு இக் கட்டுரை எழுதப்பட்டது.

1. இல்வாழ்க்கையைக் கேவலம் போகத்திற்காக ஏற்பட்டது என்று கருதாமல் அது ஒரு தரும நெறி என்று உணர்ந்து சரிவர நடத்த வேண்டும். மேலும் பழிப்புக் கிடமில்லாமல் அந்த இல்வாழ்க்கை இருக்குமாயின் நலமாகும். இலகுவாய் சாப்பிடுவதை விட்டுத் தலையைச் சுற்றிக் கையால் ஆகாரத்தை வாயில் திணிப்பதையொக்கும் இக் குறளில் துறவறத்தை நுழைத்து அத் துறவறம் பழிப்பின்றி நடத்தப் பெறின் இல்லறத்தோடு சேர்த்து எண்ணப்படுவதாயிற்று என்று பொருள் கூறுவது. பழியோடு இல்வாழ்க்கை நடத்தலாம் போலும்? ''அறத்தான் வருவதே யின்பம்'' என்ற குறளை உரையாசிரியர்கள் மறந்தார்களோ. எவ்வறத்தின் பால் நின்றாலும் குற்றமற்றிருப்பதே மாண்பாகும். துறவறத்தில் பழியில்லாமல் நிற்பது கடினம்; இல்லறத்தில் பழியில்லாமல் நிற்பது எளிது என்ற இந்தக் காரணத்தைக் கொண்டு துறவறத்தையும் இல்லறத்தையும் வள்ளுவனார் மனதிற் கொண்டு சீர்தூக்கிக் கூறத் துணிந்தார் என்று நினைப்பது உரையாசிரியர்கள் கற்பனைக் கூற்று என்று எனக்குத் தோன்றுகிறது. ஏகாரத்தை பிரிநிலைக்கண் வந்ததாகத்தான் கொள்ள வேண்டுமா! இல்வாழ்க்கையை உல்லாச வாழ்வென்று மதித்து வாழ்நாளை வீணாக்காமல் தருமமென்று கருதி கடமைகளை ஒழுங்காய் நடத்தி இன்பம் நுகர்ந்து பிழையுங்கள் என்கிற உபதேசத்தை உறுதிப்படுத்த ஏகாரத்தைவைத்தாரெனக் கொண்டால் தவறாகுமோ. ஒருவனும் ஒருத்தியும் கூடிக் கலந்து வாழும் எல்லா இல்வாழ்க்கையும் இல்லறமாகுமோ. மனையாளிடத்தில் கற்பு நிலையும் ஆடவனிடத்தில் பிறன் மனைவி விரும்பா நிலையும் பழியில்லா வாழ்வாகும். ஆகவே அறமெனப் பட்டது இல்வாழ்க்கையே.

2. அன்பும் (பிறவுயிரிடத்தில் கிருபை) அறமும் இணை பிரியாது நடத்தும் இல்வாழ்க்கை இம்மையில் மதிப்பும் மறுமையில் நற்பயனும் பயக்கும். அன்பு பண்பையும், அறன் பயனையும் கொடுக்கும். ஆடவனுக்கு மனையாளிடத்தில் உள்ள அன்பு, காதல், காமம், அருள் வினையம், பக்தி, வாஞ்சை, ஆசையென விரிக்கலாம். பிறவுயிரிடத்தில் காட்டும் அன்பை கிருபையென்னலாம். ஆகவே அன்பும், அறனும் கலந்த வாழ்வே இல்வாழ்க்கையாகும்.

3. பிறன் பழிப்புக்கஞ்சி பசியென்று வந்தவனுக்குப் பகுத்துண்ணும் கொள்கை இல்வாழ்வானிடத்தில் இருக்க வேண்டும். இந்த நன்னெறியுள்ள குடிக்குப் பொருளின்மை, மக்களின்மை, பழியுடைமை, புகழின்மை, ஆயுளின்மை ஆகிய குறைபாடுகள் எக்காலத்திலும் இல்லையாம். வழி என்பதற்குச் சந்ததி என்ற பொருள் மாத்திரம் சிறப்பல்ல. வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாப் பொருளும் சுட்டப்பட்டது.

4. துறவிகளுக்கும், கதியில்லாதவர்களுக்கும், (துறந்தார்க்கும்) துய்க்கும் பொருளற்றவர்களுக்கும் அதாவது வறுமைப்பட்டவர்களுக்கும், இறந்தார்க்கும் (அநாதப் பிரேதம், தன்னைச் சேர்ந்தவர் பிரேதம்) இல்வாழ்வான் தன்னையே அவர்களுக்குத் துணையெனக் கருத வேண்டும். பொருளை விரும்பாத் துறவிகள், ஆதாரமில்லாதவர்கள், பொருளில்லா ஏழைகள் ஆகிய மக்களைக் காக்கும் குணத்தோடு இறந்தாருக்கு நீர்க்கடன், ஈமக்கடன் முதலிய கடமைகள் இல்வாழ்வான் பாலன.

5. ஐந்திடத்து ஆறு அறம் செய்தான் இல்வாழ்வான். தென்புலம் மங்கலமொழி. இடுகாட்டைக் குறித்தார், தென்புலத்தார் மூதாதை

களாவர். இச்சொல்லுக்கு பிதிரரெனப் பொருள் கூறி அயனுற் படைக்கப்பட்டதோர் கடவுட்சாதியென்றார் பரிமேலழகர். பிதிரர் என்றால் பிரிந்து போனவர் என்பது பொருள். நம்மை விட்டுப் பிரிந்தோர் மூதாதைகளைக் கடவுள்போல் மதிக்கவேண்டும் என்று சொல்வது நமது நன்றியைக் காட்டு முறையில் சிறப்பேயாகும். கடவுட் சாதி என்னும் சொல் செவிக்கின்பம் முற்றும் மறுத்தலோடு ஏவர் மூளையையும் கலக்கக் கூடியதாய் இருக்கிறது. கடவுட் சாதி என்ற சொல்லை எவ்விடத்திலிருந்து ஆராய்ந்தெடுத்து இவ்விடத்தில் புகுத்தினரோ பரிமேலழகர் எனக்குச் சிறிதேனும் புரியவில்லை. தெய்வம் தேவருமாவார். விருந்து சிநேகிதரையும் தெரியாத மற்றவர்களையும் குறிக்கும். ஒக்கல் சுற்றத்தாராவர். தான்-தன்னை அதாவது இல்வாழ்வானைக் குறிக்கும். ஆகவே ஐந்திடத்தைக் கூறி ஆறு அறம் செய்வது சிறப்புடைத்து என்ற நீதி சொல்லப்பட்டது. ஆறு என்பதற்கு அறநெறி எனக்கொண்டு ஐந்திடத்துச் செல்வான் அது போக பாக்கியிருக்கும் ஆறிலொன்றை வரிப்பணம் என விரித்த உரையில் அமைத்தார் பரிமேலழகர். இந்த அதிகப்படியான வேலை மெச்சப்பாலதே. ஆனால் இந்த யுக்தி விசேடத்தைக் காட்ட இடப் பொருத்தமில்லை. வரிப்பணத்தைச் சுட்டக்கூடிய தகுதியான இடம் பொருளியலாகும். இல்வாழ்க்கைக் கடமைகளைப் பேசவந்த இடத்தில் வரிப் பணத்தைச் சொல்லப்புகுவது பாங்கோ. சிநேகிதரை அதிதி என்பதா அல்லது சுற்றமென்பதா?

6. இல்வாழ்வான் இயம்புடைய மூவர்க்குமுற்ற துணையாவான். இக்குறளிற்குப் பரிமேலழகர் மூவர்க்கும் என்ற சொல்லிற்குப் பிரம்மசரியன், வானப்பிரஸ்தன், சந்நியாசி ஆகிய ஒழுக்கமுள்ள மூவர்களைக் குறிக்குமென்ற பொருள் கூறினர். பழைய தமிழர்களில் இவ்வாஸ்ரம வொழுக்க மிருந்ததாகப் போதுமான சான்றுகளில்லை. மணக்குடவர் தந்தை, தாய், தாரம் ஆகிய மூவரென்றார். அப்படியாயின் மக்களுக்குத் துணையாயிருத்தல் யாரோ? மேலும் இல்வாழ்வான் என்ற சொல்லே தந்தை, தாய், தாரம், மக்கள் அடங்கிய வீட்டைக் குறிக்குமே. மூவர் இவர்கள் ஒழிந்த மூவரைக் குறிக்க வேண்டுமே? ஆகையால் இயல் இசை நாடகமாகிய முத்தமிழ்வல்ல புலவர், பாணர், கூத்தர் ஆகியவர்களே மூவராவர். பண்டைய காலத்தில் இச்சிறப்பு வாய்ந்த மூவர்கள் பலரிருந்தார்கள் என்பது தெரிந்த விஷயமாதலால் அவர்களுக்கும் இல்வாழ்வான் உற்ற துணையாவான் என்று பொருள் கொள்ளுவதே சிறப்பாகும். மனை, கல்வி, அருள், பொருள் செல்வமுடைய இல்வாழ்வான், ஒழுக்கம், தகுதி, குணம், பலம் ஆகிய இயல்புடைய மூவருக்கும் துணையாயிருப்பது போற்றத்தக்கதாகும்.

7. மேலே சொன்ன நான்கு செல்வமுடைய இல்வாழ்க்கை வாழ்பவன் அறத்தாற்றினில் வாழ்க்கை செய்ய முயல்பவர்களிற் சிறந்தவனாவான். 'இல்வாழ்வான்' என்ற சொற்றொடருக்கும் "இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவன்" என்ற சொற்றொடருக்கும் உள்ள அருத்த வித்தியாசத்தை உணராமல் சில உரையாசிரியர்கள் முயல்வார் என்பதற்கு வீட்டுப் பேற்றையடைய விரும்புகிறவர்களென்றும் மூன்றும் நிலையில் நின்றவர்களென்றும் பொருள் கூறியிருக்கிறார்கள். இல் வாழ்வார்களில் யாவர் சிறந்தவர் என்பதைச் சொல்ல வந்த குறளாய் எனக்குத் தோன்றுகிறது.

8. இல்வாழ்க்கையைச் சரிவர நடத்தினால் அதாவது மேற்கூறியபடி நண்பர், அதிதி, சுற்றம், துறவி, கதியற்றவர், வறியவன், அனாதையாயிறப்பவர், புலவர், பாணர் கூத்தர் ஆகிய பதின்மருக்கும் துணையாயிருப்பின், இந்நெறியில் அடையாப்பலனை வேறு எந்நெறியில் பெறுவது.

9. அறனிழுக்கா, ஆற்றினொழுகின் இல்வாழ்க்கை, நோற்றாரின் நோன்மையுடைத்து. ஒழுக்கு என்ற பரிமேலழகர் பாடம் பொருந்தாது. ஒருவன் மற்றொருவனை அறநெறியில் நிற்கப்பண்ணுவது எப்படி முடியும்? பசி முதலிய இடையூறு தீர்த்தலாலே தவத்தோரைத் தவ வழியில் நடக்கச் செய்வது இல்லறத்தானால் செய்யக் கூடிய காரியமா? மலையைத் தூக்க முடியும் என்று வள்ளுவனார் கருதியிருப்பாரா? இல்லறத்தான் யாவர் மாட்டும் கரவாது தன்னாலியன்ற தொண்டைச் செய்யத் தயாராயிருக்கும் மாண்பை மாத்திரம் இக்குறள் வெளியிடுகிறது.

10. ஆகவே இல்லறத்து முறையில் நின்று வழுவாது நேராக வாழ்பவன் தேவனென உலகத்தில் சிறப்பு வாய்ந்து பொலிவான்.

அறனெனப்பட்டது இல்வாழ்க்கையே. அன்பும் அறனும் இணைபிரியாத வாழ்வே வாழ்வேயாகும். பசி என்று வந்தவனோடு பகிர்ந்துண்ணல் முதற்கடமை. மற்ற கடமைகள் மேலே விவரித்திருக்கும் பத்துப் பேர்களுக்கும் துணையாயிருத்தல். நேராக வாழ்வை நடத்தினால் யாவும் பெற்றுச் சுகத்திலிருக்கலாம். வேறு மார்க்கம் தேடவோ அல்லது வேண்டவோ அவசியமில்லை. வழுவாது வாழ்பவன் சீரும் சிறப்பும் வாய்ந்த தெய்வமென மதிக்கப்படுவான்.

நன்றி : சித்தாந்தம் 1940

## வாசகர் கவனத்திற்கு

ஸப்தகிரியில் வெளியிடப்படும் சமயக் கட்டுரைகள் கருத்துக்களுக்கு, அவ்வவ் கட்டுரை ஆசிரியப் பெருமக்களே பொறுப்பாவர்.

ஆ-ர்.

ஆண்டவன் அன்பின் உருவம்; கருணைக்கடல். தன்னை வேண்டுவோர் எப்படிப்பட்டவராயினும் அவர்களுக்கு அபயம் அளிக்கிறார். அவர்கள் நல்லவர்களோ தீயவர்களோ என்று கூட பார்ப்பதில்லை. எந்த ரூபத்தில் தன்னிடம் பக்தி செலுத்துகிறான் என்பதைப் பற்றியும் அவர் கவலைப்படுவதில்லை. இப்படிப்பட்ட அன்புச் செல்வத்தை நாம் அண்டவில்லையானால் அதற்கு அவர் பொறுப்பல்ல.

நமக்கு அவரை அண்ட எத்தனையோ விதமான வழிகளை காட்டியிருக்கிறார். அதில் ஏதாவதொரு வழியே நாம் செல்லவில்லையானால் அது நமது பேரிழப்பேயாகும்.

# கருணைக்கடல்

'' யே யதா மாம் பிரபத்யந்தே,

தாம் ததைவ பஜாம்யஹம்''

என்கிறார் கிருஷ்ணர் கீதையில். ''யார் யார் என்னை எப்படியெப்படி வழிபடுகிறார்களோ, அப்படியப்படியே நான் அவர்களுக்கு அருள்புரிகிறேன். அதைச் செய், இதைச் செய் என்று கட்டளையிடாமல், எப்படி உனக்கு முடிகிறதோ அப்படி என்னைவழிபடு'' என்கிறார். இதைவிட வேறென்ன வேண்டும் நமக்கு?

இன்னும், தன்னை வழிபடுவர்களை நான்கு விதமாக வகைப்படுத்துகிறார், கீதையில் :

'' சதுர்விதா பஜந்தே மாம் ஜனா:

ஸுக்ருதினோர்ஜுன,

ஆர்த்தோ, ஜிக்ஞாஸு: அர்த்தார்த்தி,

ஞானீ ச பரதர்ஷப''

1. ஆர்த்த-கஷ்டப்படுகிறவன் 2. ஜிக்ஞாஸு-தன்னை அறிய வேண்டுமென்ற ஆர்வமுள்ளவன் 3. அர்த்தார்த்தி - செல்வத்தை விரும்புகிறவன், 4. ஞானி-தன்னை முற்றிலும் அறிந்த அறிவாளி. இன்றைய சாமான்ய மனிதர்களில், 1,3, வகைகளைச் சேர்ந்தவர்களே 99 சதவிகிதமும். 2, 4, வகைகளைச் சேர்ந்தவர்களைக் கும்பிட்டு, அவர்களுக்கு வழிவிட்டு விடுவோம். அவர்களுக்கு நம் அறிவுரை எதுவும் தேவையில்லை. ஆர்த்தன் தன் கஷ்டங்களின் நிவர்த்திக்காக ஆண்டவனை வேண்டிக் கொள்ளுகிறான். இவன் சுயநலக்காரனாக இருக்கிறானே யென்று அவனைத் தள்ளிவிடவில்லை அந்தக் கருணைக்கடல். அவனுக்கும் அருள் பாலிக்கிறேன் என்கிறார். அர்த்தார்த்தி செல்வத்துக்காக வழிபடுகிறான். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற புருஷார்த்தங்களையும் அர்த்தம் என்ற வார்த்தை குறிப்பிடுகிறது என்று வைத்துக் கொண்டால் கூட, இதில் செல்வமும் காமமும் அடங்குகிறது. எல்லாவிதமான ஆசைகளையுமே காமம் என்று சொல்லலாம். காமத்தைக் கோருவது தர்மமா? இந்தக் கேள்விக்கே இடம் வைக்கவில்லை அந்தக் கருணைக் கடல். காம பூர்த்தியைக் கோருபவனும் என்னை அதற்காக தாராளமாக வழிபடலாம்; அவனுக்கும் நான் அருள் பாலிக்கிறேன் என்கிறார் அவர். அது மட்டுமா?

'' அபி சேத் ஸுதுராசாரோ, பஜதே மாம்

அனன்ய பாக்,

ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்-

வ்யவஸிதோ ஹி ஸ:''

அவன் கெட்டவனாக, கெட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுவனாக இருந்த போதிலும் கூட, நல்லவன் என்றே மதிக்கப்பட வேண்டியவன். ஏனென்றால், அவன் தன் ஆசைகள் நிறைவேறுவதற்காக வேணும், என்னையே எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருப்பவனாக ஆகி, நாளடைவில் நல்ல பக்தனாகி, நல்லவனும் ஆகிவிடுகிறான்.

இன்னும், இந்தக் காமம் தர்மமானதா, தர்மத்துக்கு விரோதமானதா என்றுகூட யோசிக்கவில்லை. அவர், தர்ம விரோதமான ஆசை உள்ளவராயினும் என்னிடம் புத்தியைச் செலுத்தி பக்தி பண்ணலாம் என்கிறார்.

'' ந மய்யாவேசித தியாம் காம:

காமாய கல்பதே

வர்ஜிதா: க்வதிதா: நானா பிராயோ

பீஜாய தேஷ்யதே''

(பாகவதம்)

''என்னிடம் புத்தியைச் செலுத்தி பக்தி பண்ணுகிறவர்களின் காமம் காமமாகக் கருதப்படக்கூடியதல்ல. கொதிக்க வைக்கப்பட்ட அல்லது வறுத்த தானியம் விதைக்கு பிரயோஜனப்படாதது போல் இந்தக் காமம் பந்தத்துக்குக் காரணமாகாது; புனர்ஜன்மத்துக்கும் இது விதையாகாது''.

இதற்குமேல் அவன் கருணையைப் பற்றி விவரிக்க என்ன இருக்கிறது? இத்தனை சலுகைகளை அளித்தும்கூட, நாம் அவனை பக்தி பண்ணவில்லையானால், அதை ஆத்ம ஹத்தி என்றுதான் சொல்ல முடியும்.

திரு. சி. பி. ராமஸ்வாமி - திருச்சி.

## இசையினூடே....

**கவிஞர் பூந்துறை தியாகராசன்-தச்சநல்லூர்**

ராகம்-ரஞ்சனி    தாளம்-ஆதி

இசையின் திருவடிவம் திருமாலே — குழல்
இசையின் அவதாரம் கண்ணபெருமானே—இசை

அசையாத பொருள் கூட அசைந்திடும் இசையாலே
அலைந்திடும் மனம் கூடநிலைத்திடும் இசையாலே—இசை

வேய்ங்குழல் கண்ணன் ஊதிய போதினில்
விளைந்தன விந்தைகள் 'விரைந்தன பசுக்கள்'
சாய்ந்தனர் கோபிகள் 'தன்னையே மறந்தனர்'
சங்கீத அவதாரம் சாட்சாத் கண்ணனே—இசை

தத்துவ கீதையின் சாரத்தைத் தந்தவர்
சங்கினில் நாதத்தை ஊதிடும் போதினில்
கத்திடும் பாற்கடல் தானமிகு ஸ்ருதியாய்
கலையாத சங்கீத லயமதை ஊட்டிடும்—இசை.

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

அறிவை மட்டும் பெருக்குபவர்கள் மணமற்ற மலருக்கு நிகர். மனக் கசிவும், அறிவு முதிர்ச்சியும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவனே நிறை மனிதன் ஆகிறான். அன்பு, அறிவு இரண்டும் ஒருங்கே வளர்கையில்தான் ஒருவன் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வருகிறான். அத்தகைய சான்றோரால் உலகுக்குப் பெரு நன்மை உண்டாகிறது.

மிகுந்த சிரத்தையுடனும் ஆர்வத்துடன் க்ஷேத்ர-க்ஷேத்ரக்ஞன் பற்றி கேட்க ஆவலாயிருக்கும் அர்ஜுனனைப் பார்த்து பகவான் பகரலானார்:

மஹாபூதான்யஹங்காரோ
புத்திரவ்யக்தமேவ ச |
இந்திரியாணி தசைகம் ச
பஞ்ச சேந்திரிய கோசராஃ || 5 ||

இச்சா த்வேஷஃ ஸுகம் துஃகம்
ஸங்காதஸ்சேதனா த்ருதிஃ |
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன
ஸவிகார முதாஹ்ருதம் || 6 ||

'மகா பூதங்கள், அகங்காரம், புத்தி, மூலப் பிரகிருதி, பத்து இந்திரியங்கள், மனம், ஐந்து இந்திரியார்த்தங்கள், விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், உடல் அமைப்பு, உணர்வு, உறுதி—இங்ஙனம் க்ஷேத்திரமும் அதன் தோற்றங்களும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன.'

'இதம் சரீரம் க்ஷேத்ரம்' என்று முன்னர் பகவான் சொன்னாரல்லவா? அந்த க்ஷேத்திரத்தைப் பற்றிய விளக்கம் இந்த இரண்டு சுலோகங்களில் தரப்படுகிறது. சரீரம் என்பது நமது சரீரத்தை மட்டும் குறிக்காது. கட்புலனாகும் புறப்பிரபஞ்சம் முழுவதையுமே குறிக்கிறது.

சாங்கிய தர்சனத்தின்படி அடிப்படைத் தத்துவங்கள் 24. அவை முறையே முதல் சுலோகத்தில் எடுத்துக் கூறப்படுகின்றன.

**மஹா பூதங்கள்:** இவை ஐந்து. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பவை. இவை தமிழில் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் எனப்படுகின்றன. பொருள்களின் எல்லா நிலையிலும் இவை அவற்றை ஊடுருவி நிற்கின்ற காரணத்தால் மஹா பூதங்கள் எனப்படுகின்றன. பஞ்ச பூதங்கள் என்றும் இவை அழைக்கப்படுகின்றன. (ஸர்வ விகார வ்யாபகத்வாத்) இந்த ஐந்தும் ஸூக்ஷ்ம பூதங்களாகும்.

**அஹங்காரம்:** மகா பூதங்களுக்குக் காரணமாக இது அமைகிறது. 'யான்' 'எனது' எனும் எண்ணத் தொகுப்பே அஹங்காரம்: உலகப் பொருள்களுடன் தொடர்பு வைக்கக் காரணமாயிருப்பதும் இதுவே. (அஹங்காரோ மஹாபூத காரணம் அஹம் பிரத்யய லக்ஷணம்).

**புத்தி:** 'அஹம்கார காரணம் புத்தி', நிச்சயிப்பது அல்லது தீர்மானிப்பது புத்தியின் செயல். இது அகங்காரத்துக்குக் காரணமாயமைகிறது. மஹத் என்றும் இது அழைக்கப்படுகிறது. நல்லது, தீயதை பாகுபடுத்தி இது அறிகிறது.

**அவ்யக்தம்:** மூல ப்ரகிருதி எனவும் இது பொருள்படுகிறது. இது தோன்றா நிலையில் இருப்பதால் இதனிடத்து எந்தவித மாறுபாடும் நிகழ வாய்ப்பில்லை. புத்திக்கு இதுவே காரணமாகும். மனம், புத்தியினை அடக்கி ஆள்வது இதுவே.

நமது ஒவ்வொரு அனுபவமும், செயலும் மனத்தில் பதிவுகளை ஏற்படுத்துகின்றன. இவற்றிற்கு வாசனைகள் என்றும் பெயர். இந்த வாசனைகளே நமது எதிர்காலச் செயல்களுக்குக் காரணமாயமைகின்றன.

தனிமனிதன் ஒருவனுடைய செயல்களுக்கு அவனது பூர்வச் செயல்களால் ஏற்படுத்தப்பட்ட வாசனைகளே காரணமாகும். எனவே பரந்த உலகில் மக்கள் அனைவருடையவும் வாசனைத் தொகுப்பு 'மூலப்ருகிருதி' என்று அழைக்கப்படுகிறது. சாங்கியர்கள் 'மூலப்ரகிருதி' என்று அழைப்பதை வேதாந்திகள் 'மாயை' என்றழைக்கின்றனர். இவை அனைத்தும் ஈசுவர சக்திகளாகின்றன. மேலான சக்தியானது மூலப்ரகிருதி அல்லது மாயையின் மூலம் செயல்படுகையில் பிரபஞ்சமாகவும், தனி நபர் மூலம் செயல்படுகையில் ஜீவனாகவும் பரிணமிக்கிறது.

'எனது மாயை கடத்தற்கரியது' (मम माया दुरत्यया) என்று பகவான் ஏழாவது அத்தியாயத்தில் தெரிவித்திருக்கிறார். மேற்சொன்ன பஞ்ச மஹா பூதங்கள், அகங்காரம், புத்தி, மூலப்பிரகிருதி ஆகியவற்றைத் தமது எட்டுவிதப் பிரகிருதி என்று அவர் குறிப்பிடுகிறார். ''அஷ்டதா பின்னா ப்ரக்ருதி :'' - பிரகிருதி எட்டு விதமாகப் பிரிக்கப்பட்டது ஆகும். (அத்-7, சுலோகம்-4).

**பத்து இந்திரியங்கள்:** கர்மேந்திரியங்கள் ஐந்து. ஞானேந்திரியங்கள் ஐந்து. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்தும் ஞானேந்திரியங்கள். ஏனெனில் ஒன்றைப் பற்றி அறிவதற்கு அவை துணையாயமைகின்றன. புற உலகைப் பற்றிய அறிவு இவற்றின் மூலமாகத்தான் பெறப்படுகிறது. இதை வள்ளுவர்,

'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்றைந்தின்
வகை தெரிவான் கட்டே உலகு''

என்று அழகாகத் தெரிவிக்கிறார்.

கைகள், கால்கள், வாய், குதம், பிறப்புறுப்பு ஆகியவை ஐந்தும் கர்மேந்திரியங்கள். ஏனெனில் இவற்றின் துணை கொண்டே நாம் செயல் புரிகின்றோம்.

**ஏகம்:** இது மனத்தைக் குறிக்கிறது. பகவான் 'தசைகம்' என்று குறிப்பிடுவதால் பத்தோடு சேர்ந்து மனமும் பதினொன்றாவது புலனாகக் கருதப்படுகிறது.

'ஸங்கல்ப விகல்பாத்மகம் மன:' மனத்தின் தொழில் ஸங்கல்பமும், விகல்பமும் ஆகும். ஸங்கல்பம் என்றால் எண்ணுதல் என்று பொருள். விகல்பம் என்றால் ஐயுறுதல் அல்லது சந்தேகம் கொள்ளுதல் ஆகும். நமது மனம் இவற்றைத் தானே சதா செய்து கொண்டிருக்கிறது. எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிப் புண்ணாவதும், எவர் மூலம் எதைக் கேட்டாலும் அதை நம்பாது ஐயம் கொள்வதுமாகத் தானே நமது வாழ்க்கை வீணே கழிகிறது. மனம் நம்மைப் படுத்தும் பாடு பெரும்பாடு. அது சொல்லத் தரமன்று.

(தொடரும்)



# பாசமே பக்தி



*திரு. ரா. இராதாகிருஷ்ணன்,*
*திருநெல்வேலி.*

**முன்னுரை :**

இறைவன் பால் அன்பு கொண்டு அவனை அடைந்த அன்பர்கள், அவனை அடைவதற்கு பின்பற்றிய நெறி முறையும், அவர்களுக்கு ஞானம் ஏற்பட்ட விதமும் ஆராய்ச்சிக்குரிய தன்று; ஆச்சரியப்படத் தக்கது. அப்படி அவர்கள் இறைவன் மேல் பக்தி செலுத்துவதற்குக் காரணம், அவர்கள் அப்பரம்பொருள்மேல் கொண்ட பாசமேயாம். அத்தகை யோரது வாழ்க்கையை எண்ணுங் கால், எண்ணமானது தன்னை மறக் கும். அதுவே புண்ணியம் தரும். தன் நலனை மறந்து நாநிலத்துக்குத்தொண் டாற்றிய நன் மக்கள் சிலரது வாழ்க் கையில் "பாசமானது" பெற்றுள்ள சிறப்பிடத்தை ஈண்டு நோக்குவோம்.

**ஆதிசங்கரர் :**

காலடியில் பிறந்து காசினி போற் றும் பெருமகனாய் வாழ்ந்து ஏறக் குறைய முப்பத்தி இரண்டாம் வயதில் இறைவனோடு ஐக்கியமான இவர் ஈசனின் அருளோடு பிறந்தவர். பிதா வின் முகமறியாத இவர் மாதாவின் பராமரிப்பில் வளர்க்கப்பட்டார். பொருளில்லை என்ற காரணத்திற் காக, எந்த குருவும் இவரை சீட ராக ஏற்றுக் கொள்ளவில்லை. அன்னை யின் வழியாகவேதங்களைக்கற்றறிந்து சிறப்புப் பெற்றார். சுமார் ஆறு வய தளவில் தம் அன்னையிடம் சந்நியாசம் பெறுவதற்கு அனுமதி கேட்டார். அன்னை மறுக்கவே மனமுருகினார். எல்லாம் வல்ல ஈசனின் அருளுக்காக மன்றாடி, அவன்மேல், அளவிறந்த பாசம் கொண்டு இறுதியில் அவனரு ளால் அன்னையின் அனுமதியோடு சந்நியாசம் பெற்றார். இவ்விடம் சற்று நோக்கத் தக்கது. இவர் இறைவனின் அருளோடு பிறந்த தினால் அவன் மேல் பாசம் கொண்டு, பக்தியேற்பட்டது என்று கூற முடி யும். இதுபோல இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு உயிரும் அவனால் பிறந் தவை. அனைத்துயிர்க்கும் அவனே அம்மையும் ஆவான், அப்பனும் ஆவான்.

நாம்சாதாரண ஊனுடல் சொந்தத் திற்காக எவ்வளவு துக்கப்படு கிறோம்? "அன்னையும், பிதாவும் முன் னறி தெய்வம்" என்கிறோம். பெற்ற தாயின் மேல் பேரன்பு செலுத்து கிறோம். இப்படியிருக்கையில் ஏன் நாம் இறைவனின்மீது பாசம் கொள் ளக்கூடாது? நாம் எவ்வளவுக் கெவ் வளவு அன்பு செலுத்துகிறோமோ அவ்வளவுக்களவு அவ்விறைவன் நம் மேல் அன்பு செலுத்துவான். இதில் நாம் பரம்பொருள் மேல் கொள்ளும் பாசம், ஒரு பிள்ளை பெற்றோர்மீது காட்டும் அன்புக்கு ஒப்பாகும். அது போல அவ்விறைவன் நம்மேல் காட் டும் அன்பு ஒரு தாய் தன் மகன் மேல் கொண்ட பாசத்திற்கு இணை யாகும். உடல் சொந்தம், அவ்வுடல் இருக்கும் வரை தான் இருக்கும். ஆனால் ஆன்மாவின் சொந்தம் என் றும் நிலைபெற்றது. இதில் பிள்ளைப் பாசம், பக்தி ஆனது.

**ஸ்ரீ ஆண்டாள் :**

நாம் இறைவனை தாயாகவும், சேயாகவும், காதலியாகவும் தலை வனாகவும் வணங்கி அடி பணிகிறோம். அவ்வகையில் ஆண்டாள் இறைவனை தன் காதலனாக நினைந்து அவன்மேல் பாசம் கொண்டார். பன்னிரு வைணவ அடியார்களுள் ஒருவரான இவர் பெரியாழ்வாரின் வளர்ப்புச் செல்வியாக வளர்ந்தார். நந்தவனத் தில் கிடைத்த குழந்தையை எடுத்து வளர்த்த பெரியாழ்வார் வில்லி புத் தூரின் கண் வாழ்ந்த வேத நாயகர். இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட அடியார். இறைவனுக்கு சேவை செய்வதிலேயே தன் வாழ்நாளை செல வழித்த இவர் தம், பெண் மகவு அவ்விறைவனையே தன்னகத்தானாக எண்ணியதில் தவறுண்டோ? எண்ணி யது மட்டுமா, அவனை தன் இல்லறத் தானாகவும் அமைத்துக் கொண்டாள் என்பதில் ஆச்சரியமென்ன?

தன் தந்தை இறைவனுக்குச்சாத்தக் கொடுத்த மலர் மாலையை தான ணிந்து அழகு பார்த்த பின், அவ் விறைவனுக்குச்சூட்டியது அவன்மேல் கொண்ட பாசத்தினாலன்றோ? ஒரு காதலி அவளுடைய காதலன் மேல் கொண்ட பாசத்திற்கு இது எல்லை யாகுமன்றோ? இக்காலத்திலும் மாந் தரிடையே காதல் அதாவது பாசம் கொள்ளுதல் என்னும் செய்கை உண்டு. இது இறைவன் மேல் கொள் ளும் காதலுக்கு முன் நிற்பதற்கு அருகதை அற்றது. உடலின்பத் தையே அடிப்படையாகக் கொண்ட காதலிது. இறைவன் மேல் ஆண் டாள் கொண்ட காதல், அவரது ஆன்மாவை நிலைபெற வைத்து, ஆண் டாளை, அரிகேசனோடு இணைந்து வாழ்வமைத்துக் கொடுத்தது. இதில் காதற் பாசம் பக்தி ஆனது.

**திருஞான சம்பந்தர் :**

இவ்வுலகில் முற்றிய கலியை களைந் தெடுக்க இறைவனின் அவதாரம் இன்றியமையாததாகிறது? வைணவ மதத்தில் ஏன்? மொத்தத்தில் இந்து மதத்தில் இறைவனின் அவதாரம் பத்து. இதைத் தவிர இறைவனின் அடியார்களாக இவ்வுலகில் தோன் றிய பக்தர்களும் இறைவனின் அவ தாரமாகவே கருதப்படுகிறார்கள். அவ்வகையில் தோன்றிய சைவ நாயன்மார் அறுபத்து மூவரில் இவ ரும் ஒருவர். தமிழ்க் குறு முனி அகத்தியரின் வேண்டுகோளின்படி, கைலாய நாதனின் விருப்பப்படி, விக்னேஸ்வரனும், வேலவனும், மணி கண்டனும் சேர்ந்தியற்றிய சக்தியே ஞான சம்பந்தராய் உருப்பெற்றது என்பது வரலாறு.

மூன்று வயதளவில் லோக மாதா பரமேஸ்வரியின் கையினால் பாலுண்டு ஞானம் பெற்றவர். பாலுண்ட கணத்திலேயே "தோடுடைய செவி யன்" என்னும் பா பாடி, பரவச மடைந்த அண்ணல். தாய்ப் பாலுண்ட சம்பந்தர் அதாவது அகில உலகிற் கும் அன்னையான பார்வதி தேவி யிடம் பாலுண்ட சம்பந்தர் "அவன ருளை" பாடிப்புகழும் இடம் நோக்கத் தக்கது. அன்னையிடம் பாலுண்ட பிள்ளை அவ்வன்னையை அன்றோ பாடிப் புகழ வேண்டும்? இக்காலத்

தில், சிலர் அம்மா பிள்ளை என்றும் அப்பா பிள்ளை என்று கூறிக்கொள்கின்றனர். அப்படியானல் பிறை சூடியை பாடிய சம்பந்தர் அப்பா பிள்ளையா? அதுதான் இல்லை. அன்னை, தந்தையின் இயல்பைப் பெற்றுள்ளதே அவர்கட்குரிய குழந்தை. அன்னையின் மேலும், தந்தையின் மேலும் சரியளவு பாசம் கொள்வதே ஞானக் குழந்தை. இதை ஞான சம்பந்தர், அம்மை அப்பனுகிய ஆண்டவன் ஒருமுறை சோதிக்க வந்த போது கூறுகிருர். இப்பூவுலகில் அன்னையும் தந்தையும் வெவ்வேறு உடல் பெற்று வேறுபடுகின்றனர். ஆனல் இறைவனே ஆணும் பெண்ணும், ஒருவனே ஆகின்ருன். அதாவது அன்னையும் அவனே, அப்பனும் அவனே. இப்படி இருக்கையில் தந்தை மேல் காட்டும் பாசம் தாயையும் சேர்ந்ததாகுமன்ருே? மேலும் இந்த இளம் வயதில் ஊர் ஊராகச் சென்று ஆண்டவனை சம்பந்தர் தரிசித்தார். பூம்பாவை என்னும் இறந்த பெண்ணின் அஸ்தியிலிருந்து அவளுக்கு உயிர் கொடுத்து உருவம் தந்தார். (பூம்பாவை, ஞான சம்பந்தரின் அடியவள் என்பது குறிப்பிடத்தக்கது) இதை ஆண்டவனை வேண்டியே பெற்ருர். இது இறைவன் மேல் பாசம் கொண்டு, கொடுப்பான் என்ற நம்பிக்கையில் பெற்றதல்லவா? இதில் தெய்வப் பாசமே பக்தியாகியது.

**ஸ்ரீ இராமகிருஷ்ணர் :**

பாரதத்தின் புகழை பாரெங்கும் பரப்பி, உலக மக்களின் மனதில் அகவிருள் அகற்றி ஞான விளக்கேற்றி வைத்து சிறப்படைந்த விவேகானந்தரின் குருவான இராமகிருஷ்ணர், அகிலம் போற்றும், வங்கம் தந்த தங்கமாக திவ்ய ஒளி வீசியவர். காளி கோவில் அர்ச்சகராய் விளங்கி அவ்வன்னையையே ஒப்பற்ற பரம் பொருளாகக் கொண்டு, தன் தலைவனுகவும் கொண்டு அவன் மேல் பாசம் கொண்டு வழிபட்டார். காலம் காலமாய் அவ்வன்னையை பூஜித்து ஞானம் பெற்ருர். இவரும் மணம் புரிந்து கொண்டார். இவரது இல்லாளும் இவருக்கிணைய வாழ்ந்தார்; அவர் தம் இல்வாழ்க்கையின் சிற்றின்பம் என்ற சொல்லே எழவில்லை. காரணம் அகில உலகமும் புகழும் ஆண்டவனையே தன் தலைவனுகக் கொண்டார். இவர்தம் மனையாட்டியும் அவ்விறைவனையே தலைவனுகக் கொண்டார். ஒரு தலைவனின் மக்கள் சோதரர்களே என்னும்படி தம் அக வாழ்வினை ஆதி பரம்பொருளுக்கு அர்ப்பணித்துச் சிறப்புப் பெற்றனர்.

கடந்த சில நூற்ருண்டில் இந்து சமய வளர்ச்சிக்கு பெரிதும் காரணமான இராமகிருஷ்ணர் அவ்விறைவனின் தொண்டராக தம்மை இணைத்து, அவ்விறைவனை தலைவனுக எண்ணி வழிபட்டார். மக்களின் நடைமுறை வாழ்க்கைக்கேற்ப உபதேசங்களைக் கூறி பாவப் பாதையில் பரிதவித்த மக்களை தலைவனுன இறைவன் மேல் பாசம் கொண்டொழுகச் செய்தார். தொண்டாற்றுவதையே தம் கடமையாகக் கொண்டார். தொண்டுள்ளம் படைத்த விவேகானந்தரையும் நமக்கு உருவாக்கித் தந்தார். மொத்தத்தில் இராமகிருஷ்ணரின் வாழ்க்கையை நோக்கும்போது அவரின் கடமையுணர்வு நம்மை வியப்பில் ஆழ்த்தும். இதில் தொண்டன் தலைவன் மேல் கொள்ளும் பாசமே பக்தியாகி பரிணமித்தது.

**முடிவுரை :**

ஓர் அடியவன் ஆண்டவனை, முன் கூறியபடி தாயாகவும் சேயாகவும், காதலனுகவும், தலைவனுகவும் நினைத்து வழிபடலாம். ஆண்டவன் ஒருவனேயாகிலும் அவன் பலருக்கும் பலவிதமாய் காட்சியளிக்கின்ருன். உதாரணமாக நம் கோபாலனை எண்ணத்தில் கொண்டால், அவன் ராதைக்கு காதலனுகவும், யசோதைக்கு மகனுகவும் ஆய்ச்சியர்க்கு விளையாட்டுப் பிள்ளையாகவும் தெரிகின்ருன். பாசம் என்பது பக்தியின் அடிப்படை. நம் மானிட உலகில் பாசத்தினுல் உரிமையோடு ஒரு மனிதனை திட்டவும், வேண்டவும் செய்கிருேம். இது போல இறைவன் மேல் பாசம் கொண்டு அவனைக் கோபிக்கவும் வேண்டவும் செய்யலாம். ஏன் பாசத்தில் உரிமையோடு திட்டவும் செய்யலாமே? பாசம் என்பது காதலின் மறு (மாற்று) மொழியே ஆகும். காதலானது தரம் குறைகையில் காமமாகிறது. தரம் உயர்கையில் பக்தியாகிறது.

ஒருவன் தன் வயதிற்குத் தகுந்தபடி பொருட்களின் மீதோ செய்கைகளின் மீதோ பாசம் கொள்கின்ருன். இதை ஆதிசங்கரர் தம் பஜகோவிந்தத்தில் குறிப்பிடுகின்ருர். விளையாட்டுப் பிள்ளையாக உள்ளபோது, விளையாடும் பொருட்களின் மேல் ஆசை கொள்கிருன் சிறுவன். அவன் வாலிபத்தை அடையும்போது பெண்ணின் மேல் ஆசை கொள்கிருன். தன் முதிர்ந்த வயதில் தன் வாழ்வில் ஏற்பட்ட ஏற்ற தாழ்வுகளை பற்றி எண்ணிப் பார்க்கிருன். இறக்கும் தருவாயில் தான் இறைவனை இறைஞ்சுகிருன். இதைக் கருதித்தான் ''சாகும் நேரத்தில் சங்கரா, சங்கரா'' என்னும் வாய்மொழி வந்ததென்று கொள்ளலாம்.

நம்மைப் பெற்ற அன்னையிடம் சிறு வயதில் உரிமையோடு அதைத் தா! இதைத் தா! என்று அழுது பெறுகிருேம். இதுபோல் நாம் இறைவனிடமும் பெறலாம். ''வல்வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே!'' என்றும் கோட்பாடு இதனுல் விளங்கும். பாசம் சொந்தத்தை (இரத்தத்தை) அடிப்படையாய்க் கொண்டதன்று. இவ்வுலக ஜீவராசிகளின் மேல் அன்பு செலுத்துதலும் பாசம் ஆகும். ஆண்டவன் மேல் பாசம் உள்ளவனிடத்து ஆண்டவனே வருவான். அற்ப ஆசைகளிடம் பாசம் உள்ளவனை ஆண்டவனே நினைத்தாலும் மாற்ற முடியாது. இதை கிருஷ்ண பரமாத்மா கௌரவர்களிடம் தூது சென்று நிரூபித்திருக்கிருர்.

இறுதியாக, மண்ணுயிர் மேல் கொள்ளும் பாசமும் மாதவன் மேல் கொள்ளும் பாசமும் ஒன்றேயாம் என்பது உணரப்படுகிறது. நம்மில் பலருக்கு மாதவன் மேல் பாசம் கொள்ள வழியிருக்காது. அன்னவர்கள் மண்ணுயிர் மேல் பாசம் செலுத்தி பக்தியை வளர்க்கலாமே!



# கிருத்திகை நட்சத்திரம்

திரு. ஏ. ராகவய்ய ஜோசியர்,
திருவள்ளூர்.

27 நட்சத்திரங்களுள் மூன்றுவது இடத்தைப் பெற்றது ''கிருத்திகா நட்சத்திரம்''. இவ்விண்மீனின் நாம எழுத்துக்கள் ஆ, இ, ஊ, ஏ ஆகும். இதற்கு ''கார்த்திகை'' என்ற வேறொரு பெயரும் உண்டு. இந்த நட்சத்திரத்துக்கும் புராணத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. சூரபத்மனுலே துன்புற்ற தேவர்களைக் காக்க அவதரித்த சரவணனை குழந்தைப் பருவத்திலே ஆறு கார்த்திகை பெண்கள் பாலூட்டி, சீராட்டி வளர்த்தனர். பின் சிவபெருமானுலே அந்த கார்த்திகை பெண்கள் வானில் பிரகாசித்து மக்களால் பூஜிக்கப்படுமாறு ஆசி பெற்றனர். மேலும் கார்த்திகை பெண்களாலே வளர்க்கப்பட்ட முருகன் ''கார்த்திகேயன்'' என்வும் அழைக்கப்பட்டார். கிருத்திகை மாதாமாதம் வந்தாலும் கார்த்திகை மாதத்தில் வரும் கிருத்திகையே முருகனுக்கு விசேஷமாகக் கூறப்படுகிறது. அன்று வைக்கப்படும் விளக்குகள் கூட ''கார்த்திகை விளக்கு'' என்றே பிரசித்தமாகியுள்ளது.

இப்படிப்பட்ட உயர்ந்த கிருத்திகை நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு ராக்ஷஸகணம் மேல்பார்வை. 30 நாழிகைக்கு மேல் பிறந்தவர்கள் சோதனையுள்ள வாழ்க்கையுள்ளவர்கள். பிரயாணம் செய்பவர்கள் 20 நாழிகைகளுக்குப்பிறகு பிறகு தயிர் சாதத்தை புசித்துச் சென்ருல் சுபம்; காய்ச்சலில் படுத்தால் அதிக துன்புறுத்தும். சிவப்பு நிறம், முன் கோபம், இளகிய மனமுள்ளவர்கள். பெயரும், புகழும் உள்ளவர்கள். உறுதியான மனமுள்ளவர்கள். எந்த காரியத்தை விடாமுயற்சியால் சாதித்துவிடுவார்கள். தந்தை மீது அதிக பற்றுள்ளவர். மனோவேகமுள்ளவர். தெய்வபக்தி உள்ளவர்கள். சுதந்திர வாழ்க்கை நடத்துபவர்கள். அரசியல்வாதிகளாகவும் சிலர் இருப்பார்கள். அரசியலில் ஈடுபாடு உள்ளவர்கள். சுற்றத்தார்கள் மீது அதிக பாசமும், அவர்களுக்கு உதவி செய்யும் தன்மையும் உள்ளவர்கள்.

இவர்களுக்கு கத்திரிக்காய், கருணைக்கிழங்கு, வாழைக்காய் முதலியன விருப்பமுள்ளவை. இனிப்பு என்ருல் இவர்களுக்கு பிடிக்காத விஷயம். கார வகைகளில் விருப்பமில்லாதவர்கள். வேர்க்கடலை, தேன் குழல், தயிர்சாதம் முதலியவைகளில் விருப்பமுள்ளவர்கள். சினிமா கலைகளில் ஆர்வமுள்ளவர்கள். பெண்களாக இருந்தால் கணவன்மீது குறை கூறுபவர்கள். தாய் வீட்டாரை புகழ்வார்கள். அவ்வப்போது முணுமுணுத்துக் கொண்டே (பிறர்க்கு கேட்காத வகையில்) இருப்பார்கள்.

ஒராவது பாதமானுல் குருவினுடைய அம்சம். தனலாபம் அடையலாம். பிறர்க்கு உதவி செய்யும் தன்மையும் உடையவர்கள். இரண்டாவது பாதமானுல் சனி அம்சம், பாபாம்சம். இடையூறுகளான செய்கைகள், பரஸ்தல வாசம் செய்பவர்கள்.

மூன்றுவது பாதமானுல் சனி உக்ராம்சம். மந்தபுத்தி, சோம்பல், துஷ்ட சிநேகம் உள்ளவர்கள். நான்காம் பாதமானுல் குரு அம்சம். வித்தை, விநயம். தார்மீக குணம் உள்ளவர்கள். பிரதி மாதங்களில் ஞாயிறு, புதன், திங்கள், வியாழன் ஆகிய கிழமைகளிலும், 1, 10, நாட்களும் அனுகூலமானவை.

இவர்கள் ஜனித்த சூர்ய தசை ஆறு வருடங்கள். ஜன்மாதி 3-வது மாதம். ஜுரபயம். முதல் வருடம் ஜுரபயம். இரண்டாவது வருடம் சர்ப்ப பயம் (பாம்பு பயம்) 5,7,12 வருடங்களில் வாத ஜுரம். சஸ்த்ர பயம் (ஆயுதம் சம்பந்தப்பட்டவை) 21-வது வயதில் உடல்நிலை பலத்த பாதிப்பு. இவைகளுக்கு பரிகாரம் செய்யப்பட்டால் 80 வயது வரை ஆயுள்.

பெண்களுக்கு : சித்திரைமாதம் பகல் நேரத்தில் ருதுவானுல் வறுமையை அனுபவிப்பார்கள். கிருத்திகா நட்சத்திரம் ஒராவது பாதத்தில் ருதுவானுல் சுபம். இரண்டாவது பாதம்: 25 பிராமணர்களுக்கு போஜன, தட்சணைகளால் தோஷ நிவர்த்தி. 3,4-வது பாதங்களில் ருதுவானுல் சாந்தி செய்யவேண்டும். இவர்களுக்கு கழுத்தில் மச்சம் உண்டு.

ஆதாரம் '' நட்சத்திர சூடாமணி''

## கவனிக்கவும்!

'ஸப்தகிரி'யில் அவ்வப்போது தன் கட்டுரைகள் வெளிவந்ததை சுட்டிக் காட்டி, பாலாதாஸன் எனும் திரு. டி. எஸ். ஜெயராமன் அவர்கள், தங்களை ஏமாற்றியதாகவும், பலரை ஏமாற்றி வருவதாகவும் எங்களுக்கு சில புகார்கள் வந்துள்ளன. இவை உண்மையாக இருப்பின், இதன்மூலம் திருமலை திருப்பதி தேவஸ்தானம் அறிவிப்பது யாதெனில், திரு. டி. எஸ். ஜெராமனுக்கும் தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்கோ அல்லது ஸப்தகிரிக்கோ நேரிடையாகவோ, மறைமுகமாகவோ எந்தவிதமான அலுவலகத் தொடர்பும் இல்லை என்பதையும், அவரால் தனிப்பட்டவர்களுக்கோ நிறுவனங்களுக்கோ ஏதாவது இழப்புகளோ, பிரச்சனைகளோ ஏற்படின், அவற்றிற்கு தி. தி. தேவஸ்தான மேலாண்மை எவ்வகையிலும் பொறுப்பல்ல என்பதையும் அறிவிப்பதன்மூலம் பொது மக்கள் எச்சரிக்கப்படுகின்றனர்கள்.

(ஆ-ர்.)

ஆம்! கார்த்திகை மாதம் துவங்கி மார்கழி மாதம் முடிய எங்குக் கேட்கினும் ''ஸ்வாமியே சரணம் ஐயப்பா'' என்ற மந்திரம் நம் செவிப் பறைகளை தாக்கிக் கொண்டே இருக்கும். கரு நிற ஆடையும், நெற்றித் துலங்க விபூதி சந்தன குங்குமம் சகிதம் சாமி சரணம் என்றவாறு நடமாடும் இவர்கள் யார்? இவர்கள் எங்கு செல்ல இவ்விதம் கோலம் கொண்டுள்ளார்கள்? என்பதறியாதவர்கள் ஒரு சிலரே. அறிந்தவர்கள் மிகுந்த பய பக்தியுடன் இவர்களை அந்த பாவந சபரிமலையில் வீற்றிருக்கும் ஐயப்ப தெய்வமாகவே எண்ணி வணங்குவார்கள்.

தர்மத்தைக் காத்து தழைத் தோங்கச் செய்வதற்காக தர்ம நாமாலைவ சொல்லிக்கொண்டும் பாடிக்கொண்டும், கருப்புடுத்தி, பிரம்மச்சர்ய விரதம் காத்து இன்னும் சிறிது நாட்களில் ஐயப்பனை சபரிமலையில் சென்று காணப் போகின்றோம் என்ற பக்தி பரவசத்தில் மனதில் ஐயப்பனுக்குக் கோயிலமைத்து அவரை அதில் குடியேற்றி மானஸிகமாக பூஜித்து அர்ச்சித்து அவரது கதைகளை கேட்டு ஆனந்தித்து, எப்பொழுதும் அவன் நினைவிலேயே திளைத்து, காணும் பொருள்களில் எல்லாம் அவன் சொரூபத்தைக் கண்டு வணங்கி, போற்றி, வழிபட்டு அவனை நேரில் காணப்போகும் நாட்களை கணக்கிட்ட வண்ணம் சகஜமாய் நம்முடன் வளையவரும் இவர்களை வணங்கினால் அது சாக்ஷாத் அந்த ஐயப்பனையே வணங்குவதுபோல என்ற சொல் முற்றிலும் சரியே.

காவல் தெய்வமாக போற்றி வணங்கப்படுகின்றார்.

இவர் மானுடனாய் அவதரித்து 12 ஆண்டு காலம் கேரள தேசத்திலுள்ள பந்தள ராஜ குமாரனாய் வாழ்ந்ததாகவும், அந்தக் காலத்தில் அச்சிறு வயதிலேயே பல அரும் பெரும் சாதனைகள் நிகழ்த்தி துஷ்ட சக்திகளை அடக்கி சொந்த மகனுக்கு அரியணை வேண்டியதற்காக கால முழுவதும் பிரம்மச்சரிய விரதம் பூணுவதாய் வாக்களித்து தியாகத்தில் உயர்ந்து, முடிவில் கடவுளாய் தோன்றித் தனக்கு ஆலயம் எழுப்பக் கோரி, தனது பூ உலகத் தந்தையான ராஜசேகரப் பாண்டியன் வசம் தான் அணிந்திருந்த நகைகளை கொடுத்து, தான் கலியுக மானுடர்களுக்குக் காட்சிதர எண்ணி அதற்குகந்த இடமாய் சபரிமலையை தேர்ந்திருப்பதாயும், அந்த இடத்தில் தனக்கு ஆலயம் அமைக்கப் படியும், தன்னைக் காண வரும் மானுடர்கள், தன்முன் 18 படிகள் போல் தோற்றமளிக்கும் (நான்கு வேதங்கள், 2 சாத்திரங்கள், எட்டு திக்குகள், ஞானம், அக்ஞானம், வித்யை அவித்யை எனும்) 18 தேவதைகள் மீது கால் வைப்பதற்கும் பெறும் தகுதியானது ஒரு மண்டல காலம் அதாவது 41 நாட்கள் கழுத்தில் மாலை அணிந்து, கருப்புடுத்தி, அஹம் அழித்து, ஸகல ஜீவராசிகளையும் சமமாய் பாவித்து, கடின பிரம்மசர்யம் காத்து, இருமுடி சுமந்து, பெருங்காட்டுவழி கடந்து, பம்பா நதியை அடைந்து நீராடி பாவமெல்லாம் களைந்து புனிதராய் என்னைக் காண வர வேண்டும். அப்படி வரும் பக்தர்களுக்கு நான் ஜோதி உருவில் காட்சி தந்து கடை ஏற்றுவேன் என தன்னைக் காண வருபவர்கள் எப்படி வந்து தன்னைத் தொழ வேண்டும் என்று ஐயப்பனே

# சுவாமியே சரணம் ஐயப்பா!

சாஸ்தா என்ற பெயரில் மாலவனுக்கும், சிவனுருக்கும் மகவாய்ப் பிறந்து மானுடனாய் 12 ஆண்டுகளே வாழ்ந்து மாபெரும் செயல்கள் பல புரிந்து முடிவில் மஹிஷி என்ற அரக்கியை வதைத்து தீமையை அழித்து தர்மத்தை உலகில் நிலைநாட்டி ஜோதியாய், அருட்சுடராய், ஞானப் பிழம்பாய், சபரிமலைக் கோயிலில் குடிகொண்டு தன் திருக்கரத்தால் ஜீவனையும் தேவனையும் ஒன்றாக்கிக் காட்டும் சின் முத்திரை காண்பித்து, மறுகரத்தால் ஆனந்தம் ஈந்து, சரணம் என்றவர்க்கு தக்க தருணம் சரணாகதி யளிக்கும் அந்த ஹரிஹரசுதனைக் காணவேண்டிக் கார்த்திகை முதல் நாள் மாலை அணிந்து காலையும் மாலையும் குளிர்ந்த நீரில் ஆடி, நெற்றியிலும் மற்ற அங்கங்களிலும் சந்தன குங்கும விபூதி அணிந்து, சதா அவனது

புராணத்தில் இவரை சிவனாரின் மூன்றாவது புதல்வராகவும், பூதங்களுக்கெல்லாம் நாதனாக பூத நாதன் என்ற பெயரில் குறிப்பிட்டுள்ளனர். உலகில் தர்மஹீநர்களை சாஸித்து தர்மத்தை நிலைநாட்டியதால் தர்ம சாஸ்தா (அதாவது தர்மத்தை சாஸிப்பவன்) என்ற பெயரும் இவருக்கு உண்டு.

இவர் கலியுகத்தில் கிராம ரக்ஷக தேவனாகப் போற்றப்படுகின்றார். இவரை கேரள தேசத்தில் பரசுராமர் பிரதிஷ்டை செய்து ஐயப்பன் என்று பெயரிட்டார். மற்ற இடங்களில் இவர், ஐயநாரப்பன், முனீஸ்வரன், முனிஆண்டி, முனிசந்திரன், முநிநாதன், குர்ரப்பா, முக்தீச்வர் நாத் போன்ற பெயர்களில் கிராம தேவதையாக, துஷ்டக் கிரகங்களை அடக்கும் சக்தி வாய்ந்த எல்லைக்

தன் வாயால் கூறியதாய் இன்றும் அந்த பந்தள தேசத்து வம்சத்தினர் கூறுவர்.

இப்படித்தான் என்னை வந்து காண வேண்டும் என வேறு எந்த இந்துக் கடவுளரும் கூறியதாகத் தெரிய வில்லை. ஆகையால்தான் அவரைக் காண சங்கல்பித்த ஒவ்வொருவரும் ஆண்டின் இறுதியில் வரும் கார்த்திகை மாதம் வரை காத்திருந்து மாலை அணிந்து மண்டல காலம் விரதம் இருந்து ஐயன் ஐயப்ப சாமியை சபரி மலையில் சென்று கண்டு மகிழுகின்றனர்.

இவருக்கு எம்மதமும் சம்மதமே, ஜாதி மத பாஷா பேதமில்லாதவர் இந்த ஐயப்பன். சாதாரணமாக நமது இந்துக் கோவில்களில் சில குறிப்பிட்ட எல்லையை கடந்து செல்ல இந்து அல்லாதவர்கள் அனுமதிக்கப்பட மாட்டார்கள். ஆனல் இவரது வன யாத்திரையின் ஆரம்பத்திலேயே வாவர் என்ற முஸ்லீம் சாமியின் கோவிலுக்குச் சென்று வணங்கி பிறகுதான் நாம் நமது யாத்திரையை காட்டிற்குள் துவக்க வேண்டும். ஐயப்ப சாமியின் அருமை நண்பரான இந்த வாவரும் அவரது குழுவினரும் நமக்கு அந்த வனம் முழுவதும் துணையாய் இருந்து எந்த இடரும் வராமல் நம்மைக் காத்து ஐயன் ஐயப்ப சாமியின் கோவிலை அடையும் சரியான மார்க்கத்தைக் காட்டும் வழித் துணையாக வருபவர்கள் என பல அனுபவம் மிகுந்த குரு சாமிகள் கூறுவார்கள்.

இவர் பிரம்மசாரியாய் கால முழுவதும் வாழ்ந்தார் என புராணங்கள் கூறுகின்றன. மஹிஷிமுகி அதாவது எருமை முகம் கொண்ட கரம்பிகை என்ற அரக்கியானவள் பிரம்மனை நினைத்துக் கடும் தவம் புரிந்து வரங்கள் பல பெற்று தேவர்களைத் துன்புறுத்தி இந்திரனின் அரியணையை கைப்பற்றி தேவர்களுக்குச் சொல்லொணு இன்னல்கள் செய்தனள்.

அவளது வரத்தின்படி அவளை அழிக்க இரு ஆண் கடவுர்களான மாதவனும், ஈசனும் இணைந்து (மோகினி அவதாரம்) ஐயப்பன் தேவர்களின் துயர் நீங்க அரக்கி மஹிஷியை தனது பாதங்களால் மர்த்தனம் செய்து உயிர் நீக்கச் செய்தார்.

அரக்கி மஹிஷி மடிந்தாள் என்ற மகிழ்ச்சியில் தேவர்கள் அனைவரும் மலர் மாரிப் பொழிந்தனர்.

அப்பொழுது மடிந்த அரக்கியான மஹிஷி சாப விமோசன மடைந்து லீலாவதி என்ற அழகிய பெண் உருக் கொண்டுஐயப்ப ஸ்வாமியை நோக்கி, 'எனக்கு சாப விமோசனமளித்ததாங்கள்தான் என் பதி. தாங்கள் பூர்வ ஜன்மத்தில் தத்தாத்ரேய முனிவராய் இருந்து உலக நலன் கருதி யாகம் செய்ய முற்பட்ட தருணம் உங்களுடைய பத்னியாகிய நான் என் மந்த புத்தியால் உங்களது நற்பணிக்கு உதவாமல் கடமை மறந்து காம உணர்வு மேலீட்டால் உங்களை அணைத்து உங்களது பணிக்கு இடையூறு ஏற்படுத்திய சமயம் தாங்கள் சினம் கொண்டு என்னைப் பார்த்து "நீ மானுட தர்மத்தை மறந்து காம வேட்கையால் அரக்கர்களைப் போல் நடந்து கொண்டதால் எருமை வடிவு கொண்டு அரக்கர் குலத்தில் பிறக்கக் கடவாய்'' என சபித்தீர்கள். நானும் அப்பொழுதிலிருந்து மனநிலையில் உங்களைப் பார்த்து "அப்படியாயின் அந்த ஜன்மாவிலும் நீரே எனக்கு சாப விமோசனம் அளிக்கும் மானிடனய் மீண்டும் பிறக்க வேண்டும்'' என மறு சாபம் கொடுத்தேன். அதன்படி எனக்குச் சாப விமோசனம் அளித்த நீங்கள்தான் என் நாயகர் என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்' என வேண்டி நின்ருள்,

திரு. சந்திரமௌலி குருசாமி
திருப்பதி.

அது கேட்டு ஐயப்பன் பூர்வ ஜன்ம நினைவை அடைந்து இவள் என் மனைவியே ஆனுலும் நான் இவளை மனைவியாக ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனெனில் தான் இந்த ஜன்மம்

## திருமலையிலுள்ள ஸ்ரீனிவாசர்கள்

திருமலை திருப்பதிக்கு சென்று வேங்கடாசலபதியை மட்டும் தரிசித்து வருகிறீர்களே. அங்கேயுள்ள பல ஸ்ரீனிவாசர்களைப் பற்றி தெரிந்துகொள்ள வேண்டாமா?

**போக ஸ்ரீனிவாசர்**

இவர் வேங்கடாசலபதி காலடியில் இருக்கிருர். தினம் அபிஷேகம் இவருக்குத்தான். இரவில் பள்ளியறையில் வைத்து தாலாட்டுப்பாடுவது இவருக்கே. இதற்கு ஏகாந்தம் என்று பெயர்.

**உத்ஸவ ஸ்ரீனிவாசர்**

இவருக்குத்தான் கல்யாண உத்ஸவம், ஊஞ்சல் உத்ஸவம் எல்லாம். பிரம்மோத்ஸவமும் இவருக்குத்தான்.

**கொலுவு ஸ்ரீனிவாசர்**

இவரை பங்காரு வாகிலி (தங்க வாயில்) முன் வைத்து, தினம் பஞ்சாங்கம் படிக்கப்படுகிறது.

**உக்கிரக ஸ்ரீனிவாசர்**

இவர் கார்த்திகை மாதம் கௌசிக ஏகாதசியன்று உஷக்காலத்தில் புறப்பட்டு சூரிய உதயத்திற்குள் கோவிலுக்கு வந்து விடுவார்.

முழுவதும் பிரும்மச்சாரியாய் இருப்பதாகத் தாய்க்கு செய்து கொடுத்துள்ள சத்திய பிரமாணத்தை நினைவு கூர்ந்து இந்த இக்கட்டிலிருந்து விடுபட லீலாவதியிடம் ''நான் சபரிமலை என்ற இடத்தில் அமர்ந்து கலியுக மானுட பக்தர்களுக்கு தரிசனம் தர எண்ணியுள்ளேன். என்னைக் காண வரும் பக்தர்கள் மண்டல காலம் (41 நாட்கள்) விரதமிருந்து பக்தியுடன் கார்த்திகை மாதம் முதல் நாள் முதல் கழுத்தில் மாலை அணிந்து ''சாமியே சரணம் ஐயப்பா'' என்ற என் தாரக நாம ஜபத்துடன் தை முதல் தேதி சங்க்ராந்தி புண்ணிய தினத்தில் என்னைக் காண சபரிமலையில் கூடுவார்கள். நான் அன்றைய தினம் இந்திரனால் காந்த மலைமீது கட்டப்பட்ட பொன்னம்பலத்திலிருந்துஜோதிவடிவில்அவர்களுக்குக் காட்சி தருவேன். அச்சமயம் நீ என் இடப்புரத்தில் அமர்ந்து ''மாளிகைபுரத்தம்மா'' என்ற பெயரில் கோயில் கொண்டு என்னைக் காண வரும் பக்தர்களுக்கு அன்னையாகி அருள்புரிவாயாக. என்னை முதல் முறை காண வேண்டி மாலை தரிக்கும் கன்னி ஐயப்பன் எருமேலியில் பேட்டையாடி ஆருயிர் நண்பன் வாவரை வணங்கி அவருதவியுடன் கையில் சரக்கோலுடன் 40 மைல் பெருங்காட்டு வழியில் நடந்து வந்து எனது பிறப்பிடமாகிய பம்பையாற்றில் நீராடித் தங்களது பாவமெல்லாம் களைந்து புனிதராய் சபரி பீடம் என்ற இடத்தை அடைந்து சரங்குத்தி ஆல் என்ற இடத்தில் தங்கள் கைக் கொணர்ந்த சரத்தினை விடுத்து என்னைத் தரிசிக்க வருவார்கள்.இவ்வாறு எந்த வருடம் ஒரு சரங்கூட இல்லையோ அந்த வருடம் மானுடர் எல்லோரும் என்னை தரிசித்தாகி விட்டது என்று அர்த்தம். அந்த வருடம் நான் உன்னை மணந்து கொள்கிறேன்'' என்றார் ஐயப்பன்.

மாளிகைபுரத்தம்மையும் ஐயன் கூற்றுப்படி அவரை மணக்க வேண்டி தவம் செய்து வருகின்றாள். ஒவ்வொரு வருடமும் மகர சங்கராந்தி தினம் இரவு மாளிகைபுரத்தம்மனின் யானை சபரி பீடம் வந்து அங்கு நாளுக்கு நாள் பெருகி வரும் கன்னி ஐயப்பமார்களின் பக்தியை பறைசாற்றும் வண்ணம் சரங்குத்தி ஆலில் குத்தப்பட்டிருக்கும் சரங்களைக் கண்டு இந்த வருடமும் நம தன்னைக்கு திருமணம் இல்லையே என்று வருதத்துடன் பார்த்துத் திரும்புவதை இன்றும் அந்த மகர சங்கராந்தி திருநாளன்று நமது யாத்திரையில் அன்றைய இரவு கண்கூடாக சபரிபீடத்தில் காணலாம். இந்த இடத்தில் ஐயப்ப பக்தர்கள் ஒரு விஷயத்தைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். ஐயப்பனின் மகர விளக்கையும், மகர ஜோதியையும் ஒன்றுக்கொன்று முரணாகப் புரிந்து கொண்டு பக்தர்கள் குழப்பமடைகிறார்கள். சங்கராந்தி சுப தினத்தன்று மாலை ஐயன் ஐயப்பன் காந்த மலை உச்சியிலிருந்து ஜோதி ரூபமாய் தோன்றுகிறார். இதை தை மகர ஜோதி என்ற பெயரில் குறிப்பிடுகின்றார்கள். அன்றைய தினம் இரவு மாளிகைபுரத்தம்மனின் யானையின் மீது கொண்டு வரப்படும் விளக்கிற்கு மகர விளக்கு என்று பெயர். எனவே மகர ஜோதி வேறு, மகர விளக்கு வேறு எனப் புரிந்து கொள்ள வேண்டும்.

தை மாதம் ஒன்றும் நாள் மகரசங்கராந்தி தினத்தன்று இவருக்கு அணிவிக்கப்படும் திருவாபரணச்சார்த்துச் சேவை மிகவும் பிரசித்தமாகும். ஐயன் ஐயப்ப ஸ்வாமியின் திருவாபரணங்கள் தை மாதம் ஒன்றும் நாள் பந்தள தேசத்தரசனின் சந்ததியினர் ஐயப்பனால் கொடுக்கப்பட்ட இந்த ஆபரணங்களை ஒரு வருடம் விரதம் இருந்து பந்தள தேசத்திலிருந்து மூன்று பெட்டிகளில் வைத்து சபரிமலைக்குக் காட்டு வழியாய் தகுந்த காவலுடன் சுமந்து கொண்டு வரப்பட்டு திருப்பொங்கல் நாள் ஐயனுக்குச்சாற்றப்படும்.இதன்பின்னணியில் ஒரு சம்பவம் கூறப்படுகின்றது.

(அடுத்த இதழில் முடியும்.)

# தெரிந்து கொள்ளுங்கள்

1. காலையில் கிழக்கு பார்த்தும் மாலையில் மேற்கு பார்த்தும் ஜெபிக்க வேண்டும்.
2. சன்னதியில் விழ்ந்து வணங்கும்போது மேற்கேயாவது தெற்கேயாவது கால் நீட்ட வேண்டும். கிழக்கிலாவது வடக்கிலாவது கால் நீட்டி வணங்கக் கூடாது.
3. கிழக்கு அல்லது வடக்கு முகமாக இருந்து ஆசமனம் செய்ய வேண்டும்.
4. கிழக்கு அல்லது வடக்கு முகமாகப் பார்த்து குளிக்க வேண்டும்.
5. திருக்கோவில் மூடி இருக்கும்போதும், திருவிழாவில் உலா வரும் போதும், திருமஞ்சனம் கொண்டு பூசை செய்யும் காலத்தும், திரை இட்டிருக்கும்போதும், திருக்கோவிலினுள் வழிபாடு செய்யக் கூடாது.

## திருவிளக்கு

திருவிளக்கு மும்மூர்த்தி வடிவம். ஆசனமாகிய அடிப்பாகம் பிரம்ம அம்சம், நெடித்தண்டாகிய நடுப்பாகம் விஷ்ணு அம்சம். நெய் ஏந்தும் அகல் பகுதி சிவன். அதன் மேல் உள்ள பகுதி மகேஸ்வரன். சிகரமாகிய உச்சிப் பகுதி சதாசிவன். நெய்-நாதம்; திரி-பிந்து; சுடர்-திருமகள்; பிழம்பு-கலைமகள்; தீ-சக்தி.

தகவல் : கமலா மாரியப்பன்,
கோயம்புத்தூர்.

# அதிகமான் கோட்டையின் இதிகாச ஓவியங்கள்

**தரணி புகழ் தகடூர்**

தருமபுரியில் இருந்து சேலம் செல்லும் பாதையில் சுமார் ஐந்தாவது கிலோ மீட்டரில் இருக்கும் இடம்தான் அதிகமான் கோட்டை. இன்று இது ஒரு சிற்றூராகக் காணப்படுகிறது. புகைவண்டி நிலையமும், உயர்நிலைப் பள்ளியும் உள்ளன. உற்று நோக்கினேமானல், ஊரைச் சுற்றி பழைய கோட்டைச் சுவரின் மண் மேட்டுத் தடயங்கள் காணப்படுகின்றன. அகழி புதையுண்டு விட்டது. ஊரின் கிழக்கே இன்று காணப்படும் பெரிய ஏரியில் இருந்து கோட்டையின் அகழிக்கு நீர் வந்திருக்க வாய்ப்பு உண்டு. நிலமட்டத்திற்கு அடியே, ஆங்காங்கே செங்கற் சுவர்கள் காணப்படுகின்றன. பழைய நாணயங்களும் கண்டெடுக்கப்பட்டு வருகின்றன.

''ஆடதானி நின்சி அதிகமானு கோட செடி போயெ'' என்று அப்பகுதியில் வழங்கப்பட்டு வரும் தெலுங்குப் பழமொழி, ஒரு பெண்ணினுல் அதிகமான் கோட்டை அழிந்து விட்டது என்றும் பொருள் உடையதாகும்; அதிகமான் காலம் முதல் ஆங்கிலேயர் காலம் முடிய, அக்கோட்டை பல தடவை அழிவுக்கு ஆளாகி இருக்கலாம். இவற்றில் எக் காலத்தில் ஒரு பெண்ணுல் அக்கோட்டை அழிந்தது என்று கூற முயல்வது வீண் முயற்சி ஆகும்.

**வரலாற்றில் தகடூர் :**

கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த கடையேழு வள்ளல்களில் ஒருவனை அதிகமான் நெடுமான் அஞ்சி தனது அவைக்களப் புலவரான அவ்வையாருக்கு அருநெல்லிக்கனி கொடுத்த செய்தி உலகப் புகழ் பெற்றதாகும். ஆயுளை நீட்டிக்கச் செய்யும் அவ்வருநெல்லிக்கனியைத் தான் மட்டும் உண்ணுமல், தமிழ் மீது கொண்ட பற்றின் காரணமாக அவ்வைக்குக் கொடுத்தான் அம்மன்னன். இவ்வம்மையார் அதிகமானின் மறைவின்போது பாடிய புறப்பாடல்கள் படிப்போர் நெஞ்சை நெகிழச் செய்வனவாகும்.

அதிகமானின் முன்னேர் எவரோ தாம் கரும்பினை வேறு நாட்டிலிருந்து (சீன அல்லது மலேயா) இங்குக் கொண்டு வந்து ஆரம்பத்தில் பயிரிட்டதாகப் புறப்பாடல் 99 கூறுகிறது.

சங்க காலத்திலேயே கட்டியர்களும், கங்கர்களும், மலையமான்களும், சேரவேந்தர்களும் தகடூர்ப் பகுதியை ஆண்டு வந்தார்கள். அகநானூற்றுப் பாடல் ஒன்றினை 'அதியன் விண்ணத்தன்' என்பவன் எழுதியிருக்கிறுன். இவன் அதிகமான்களின் மரபில் வந்தவனுக இருக்க வேண்டும். அதிகமான் நெடுமான் அஞ்சியின் மனைவி நாகையார் அகப்பாடல் ஒன்று எழுதியுள்ளாள்.

ஏறக்குறைய கி. பி. 5ஆம் நூற்றுண்டில் கங்கர் என்னும் மரபினர் தகடூரில் தமது அரசை நிலைநாட்டினர்கள். கி. பி. 6ஆம் நூற்றுண்டில் இப்பகுதி கங்கர்களின் கையிலிருந்து பல்லவர்களின் கைக்கு மாறிவிட்டது. விண்ணவர்மன் என்பவன் அப்போது புகழ்பெற்ற மன்னனுகக் காணப்பட்டான். கி. பி. எட்டாம் நூற்றுண்டு வாக்கில் இப்பகுதியை ஆண்ட மன்னன் மாவலி வாணராயன் ஆவான். கி. பி. 8 அல்லது 9-ஆம் நூற்றுண்டுகளில் இப்பகுதி நுளம்பர்களின் கையில் சிக்கியது. இந் நுளம்பர்கள் கட்டிய கலை நுணுக்கம் மிக்க கோயிலை தருமபுரி நகரில் இன்றும் காணலாம். கி. பி. பத்தாம் நூற்றுண்டில் இப்பகுதி சோழர்களின் கையில் சிக்கியது. பதின்மூன்றும் நூற்றுண்டில் இப்பகுதியை ஆண்ட மன்னன் 'இராஜராஜ விடுகாதழகிய பெருமான்' என்னும் அதிகமான் மரபில் தோன்றியவன் ஆவான். இவன் மூன்றும் குலோத்துங்க சோழனுக்கு அடங்கிய மன்னனுகத் திகழ்ந்தான்.

சோழர் ஆட்சிக்குப் பிறகு இப்பகுதி விஜயநகர நாயக்கர் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியாக விளங்கியது. பிறகு திப்பு சுல்தானின் கைக்குக் கிட்டி, இறுதியில் ஆங்கிலேயர்கள் கையில் சிக்கியது. ஸர் தாமஸ் மன்றேவின் மனதிற்கும், உடலுக்கும் உகந்த இடமாகத் திகழ்ந்தது தருமபுரி (தகடூர்).

சுருங்கக் கூறின் இக் காலத்தில் தருமபுரி என்று வழங்கப்படும் அக்காலத் தகடூரை ஆண்ட மன்னர் பரம்பரையினர் பலர் அத்தனைப் பேரையும் கவர்ந்த கன்னியாக விளங்கிய அப்பகுதிதான் இன்று பின்தங்கிய மாவட்டம் என்னும் பெயரையும் தாங்கிக் கொண்டுள்ளது. காரணம், அந்நியர் படையெடுப்புகளுக்கு இவ்விடம் ஒரு பாலமாக விளங்கியதே ஆகும்.

**புலவர் பா. அன்பரசு எம்.ஏ.,பி.எட்.,**
**சேலம்-2.**

**சென்னராயப் பெருமாள் கோயில்**

சேலம்—தருமபுரி தேசிய நெடுஞ்சாலை இக் கோட்டையின் குறுக்கே

வடக்கு—தெற்காகச் செல்லுகிறது. கோட்டையின் பெயரே இந்த ஊருக்கும் ஆகி வந்துள்ளது. சாலையின் மேற்குப் பக்கம் காணப்படும் கோயில் சென்னராயப் பெருமாள் கோயில் ஆகும். இது, இன்று இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் பராமரிக்கப்பட்டு வருகின்றது. இக் கோயிலைத் தவிர வேறு பல கோயில்களும் இங்குக் காணப்படுகின்றன. சில இடங்களில் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அவை சோழர் காலத்தவை.

இப்போது சென்னராயப் பெருமாள் கோயிலுக்குள் நுழைகிறோம். கோயிலைச் சுற்றிப் பாதுகாப்பிற்காக முள்கம்பி வேலியும், இரும்புக் கதவும் போடப்பட்டுள்ளது. கோயிலுக்கு முன் கோபுரம் கிடையாது; ஆனால் கோபுரம் கட்டுவதற்குரிய ஆயத்தநிலை செய்யப்பட்டுள்ளது. இக் கோயிலின் காலம் சுமார் 16-ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்தது.

கோயிலின் வாசலில் நுழைந்ததும் வழக்கம்போல் பலிபீடம், கொடிக் கம்பம், கருடாழ்வார் ஆகியவை காணப்படுகின்றன. அகன்ற திருச் சுற்று காணப்படுகின்றது. மகா மண்டபம், இடைக்கட்டு (அர்த்த மண்டபம்), உண்ணாழி (மூல ஸ்தானம்) ஆகியவை காணப்படுகின்றன. கோயில் கிழக்கு நோக்கிய நிலையில் உள்ளது. மகாமண்டபத்தைக் கடந்து இடைக்கட்டு மண்டபம் அதன் பிறகு உண்ணாழி.

**இதிகாச ஓவியங்கள்**

மகாபண்டபத்தின் விதானம் கருங்கல் தளங்களால் வேயப்பட்டு வெளிப்புறம் சுண்ணாம்புக் காரையால் பூச்சு வேலை செய்யப்பட்டுள்ளது. விதானத்தின் உட்புறம், கருங்கல்தளத்தின் மேல் இலேசாகச் சுண்ணாம்புக் காரை பூசப்பட்டு அதன் மேல் வண்ணக் கலவை கொண்டு ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. விதானம் கிழக்கு மேற்கே மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. நடுப்பிரிவில் திருமாலின் விசுவரூபக் காட்சி தீட்டப்பட்டுள்ளது. மற்ற இருபிரிவுகளிலும் இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசக் காட்சிகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. இவ்வகை ஓவியங்கள், தளத்தில் பூசப்பட்ட சுண்ணாம்புக்காரை காய்வதற்குள் தீட்டப்பட வேண்டும் என்பர்.

இதில் இராமாயண மகாபாரதக் காட்சிகள் சிறுசிறு கட்டங்களில் தீட்டப்பட்டுள்ளன. ஆங்காங்கே காட்சிகளை விளக்கும் பொருட்டுத் தெலுங்கு மொழியில் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. கதைக் காட்சிகள் சிறுசிறு கட்டங்களில் பிரித்து எழுதப்பட்டிருப்பதைப் பார்க்கும் போது, தருமபுரி கோட்டைக் கோயில் இராமாயணச் சிற்பங்கள் தாம் நமக்கு நினைவு வருகின்றன.

தருமபுரி நகரின் வடக்கேயுள்ள மல்லிகார்ஜுன சுவாமி கோயில் அம்மன் சந்நிதியின் சுற்றுச்சுவர் உபபீடத்தில் இராமாயணச் சிற்பங்கள் சிறிய அளவில் கதை முழுவதும் உள்ளடக்கிச் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றையே அதிகமான் கோட்டை சென்னராயப் பெருமாள் கோயில் ஓவியங்கள் நமக்கு நினைவூட்டுகின்றன.

பல்லவர், பாண்டியர், சோழர் ஓவியங்களை நேரில் பார்த்தவர்களுக்கு இவ்வோவியங்கள் அவ்வளவு சிறப்பில்லாமல் தோன்றலாம். நாயக்கர் கால ஓவியங்களும், மராட்டியர் கால ஓவியங்களும், பல்லவர், பாண்டியர், சோழர் கால ஓவியங்களைப் போல அவ்வளவு நுணுக்கத்துடன் காணப்படுவது இல்லை தான்.

பனைமலையில் காணப்படும், சிவபிரானின் ஆடலைக் கண்டு மெய்ம் மறந்து நிற்கும் அன்னையின் அழகையும், காஞ்சி கைலாச நாதர் கோயிலில் காணப்படும் நுணுக்கமான வேலைப்பாட்டினையும், சித்தன்ன வாசல் தாமரைத் தடாகம், தூணில் காணப்படும் அரசன், அரசி ஆகியோரின் ஓவியங்களில் காணப்படும் நெளிவு, கழிவு, தஞ்சைப் பெரிய கோயிலில் காணப்படும் நடனமாது ஆகிய ஓவியங்களைப் போல நாயக்கர் கால ஓவியங்கள் இருக்காதுதான்.

இருப்பினும் அக்கால ஓவியங்களுக்கும், தற்கால ஓவியங்களுக்கும் பாலமாக விளங்கியவை நாயக்கர் கால ஓவியங்கள் என்றால் மிகையாகாது.

**காலத்தால் அழியாத கலைச் செல்வம்**

இப்போது சென்னராயப் பெருமாள் கோயில் ஓவியங்களின் சில காட்சிகளைக் காணலாம். தெலுங்கு பெரும்பான்மையும், கன்னட எழுத்துக்கள் சிறுபான்மையும் கலந்து விளக்கங்கள் எழுதப் பட்டுள்ளன. சில இடங்களில் சிறந்த கவிதை நடையையும் காணலாம்.

உதாரணமாக, 'ராமுடமை தானு ஒக்கடேகானி வேறே ராமுடு எவ்வடனி பரசுராமுடு ராம பத்ருனி அட்டு தாகுட' (இராமன் என்பவன் தான் ஒருவனேயல்லாமல் வேறு இராமன் எவன்? என்று பரசுராமன் இராமபத்திரனை வழி மறித்தான்)

'ராமபத்ருடு பரசுராமுனி பங்க பரசி முந்தரசாகி போவுடு' (இராம பத்திரன் பரசுராமன் ஆணவத்தை அடக்கி முன்னேறிச் சென்றான்)

'தசரதுடு பலிகினட்டுக ராமபத்ருனி பதினலுகேண்ட்லு வனவாசம் புனகு..' (தசரதன் கூறியவாறு இராமபத்திரனை பதினான்கு ஆண்டுகள் வனவாசத்திற்கு..')

'ராவனேஸ்வருடு ஸந்யாசிகா சீதம்ம ஆஸ்ரமானிகி வச்சி பிக்ஷ அடுகுட' (இராவணேஸ்வரன் சந்நியாசியாக சீதையின் ஆசிரமத்திற்கு வந்து பிட்சை கேட்க) ஆகியவற்றைக் கூறலாம்.

(40-ம் பக்கம் பார்க்க)

# வேலூர் ஜலகண்டேஸ்வரர்

புலவர். மு. மணி எம்.ஏ., பி.எட்.
வேலூர்.

**முன்னுரை:**

வட ஆற்காடு மாவட்டத்தின் தலைநகரமாக விளங்கும் இராய வேலூர் என்றழைக்கப்பட்ட வேலூர் நகரமானது சரித்திரப் புகழ் பெற்ற அழகிய கோட்டையையும், கோட்டையினுள் எழில் மிகுந்த ஜலகண்டேசுவரர் ஆலயத்தையும் கொண்டது. இக்கோயிலுள் மூலவர் இல்லாமையால் சுமார்400 ஆண்டுகளாகப்பூஜையின்றி வெறிச் சோடிக் கிடந்தது. இக்கோயிலை தொல்பொருள் இலாகாவினர் பராமரித்து வந்தனர். கடந்த மார்ச் மாதம் 16 ஆம் தேதி வேலூர் பக்த பிரமுகர்களின் முயற்சியால் சத்துவாச்சாரியிலிருந்த மூலவரைக் கொண்டு வந்து பிரதிஷ்டை செய்தும் அதற்கு மறுநாள் அகிலாண்டேஸ்வரி அம்மன் சிலையைப் பிரதிஷ்டை செய்தும் தினசரி ஆயிரக் கணக்கான உள்ளூர், வெளியூர் மக்கள் தரிசனம் செய்தும் வருகின்றனர். சுவாமி இல்லாத கோயிலைக் கொண்டது வேலூர் மாநகரம் என்ற அவப் பெயர் இதுவரையில் இருந்து வந்தது. அப்பெயர் நீங்கி இப்போது கோட்டைக்குள்ளிருக்கும் அழகிய ஜலகண்டேசுவரர் ஆலயம் பக்தர்கள் தினம் சென்று வழிபடும் புனித ஸ்தலமாக விளங்குகிறது.

இக்கோயிலுக்கு ஏப்ரல் மாதம் 11 ஆம் தேதி திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் வருகை புரிந்தார். அவருக்கு கோயிலின் சார்பாக சிறப்பான வரவேற்பளிக்கப்பட்டது. வேலூர் திருவேங்கடவன் பள்ளியின் சார்பில் அபிஷேகம் நடத்தப்பட்டது. பின்னர் செயலாட்சித் தலைவர் அவர்கள் ஜலகண்டேஸ்வரருக்கு சேஷவஸ்திரம் அளித்து புதிய உண்டியல் ஒன்றையும் திறந்து வைத்தார்.

**கோவில் வரலாறு:**

இக்கோவில் கி. பி. 1212-இல் கட்டத்துவங்கி கி. பி. 1221ஆம் ஆண்டில் கட்டி முடிக்கப்பட்டதாகவும், விஜயநகரப் பேரரசர்க்கு உட்பட்டு ஆட்சி புரிந்த பொம்மி ரெட்டி, திம்ம ரெட்டி ஆகிய இருவரும் பத்திர காசி என்ற சிற்பியைக் கொண்டு இக்கோயிலைக் கட்டியதாகவும் கோவில் கல்வெட்டால் அறிலாம். கி. பி. 1556 வரை பல் வேறு அரசர்களால் இக்கோவிலில் சிறப்பான பூஜைகள் நடத்தப்பட்டு வந்ததாகவும், நீருக்கடியில் மூலவர் இருந்ததால் இக்கோவில் மூலவருக்கு ஜலகண்டேஸ்வரர் என்ற பெயர் ஏற்பட்டதாகவும் கல்வெட்டுச் செய்தியால் அறிகிறோம். இக்கோவிலானது காஞ்சிபுரம் ஸ்ரீ வரதராஜப் பெருமாள் ஆலயத்திலுள்ளது போன்ற அழகிய சிற்ப வேலைப்பாடுகள் கொண்ட கல்யாண மண்டபமும், வாயிற்புரம் உயர்ந்த இராஜ கோபுரமும் கொண்டுள்ளது. விஜய நகர அரசர்களின் கட்டிடபாணியில் கருவறை, உண்ணாழி, மகா மண்டபம் ஆகியவற்றைக் கொண்டு திகழ்கிறது. இக்கோவிலிருந்து சுரங்கப் பாதை ஒன்று 13 கி. மீ. தொலைவிலுள்ள திருவிருஞ்சிபுரத்திலுள்ள ஸ்ரீமார்க்கபந்தீஸ்வரர் ஆலயத்திற்குச் செல்கிறது.

**அபூர்வ நாகலிங்க கலசம்:**

ஜலகண்டேஸ்வரர் ஆலயம் இருக்குமிடம் முற்காலத்தில் ஏரிக்கு நடுவில் திட்டாக இருந்ததாகக் கூறுவர். இக்கோவிலிலுள்ள லிங்கத்தை அத்திரி என்ற மகாமுனிவர் அமைத்ததாகவும் நாளடைவில் லிங்கத்தைப் புற்றுமூடிக்கொண்டதாம். அப்போது இருந்த அரச பரம்பரையினர் ஏராளமான பசுக்களை வளர்த்து வந்ததாகவும், மேய்ச்சலுக்குச் சென்ற அப்பசுக்களில் ஒன்று புற்றின் வாய்ப்புறமாக பாலைச்சொரிந்ததாகவும் அதைக்கண்ட அரசன் புற்றினுள் லிங்கம் இருந்ததைக் கண்டு இக்கோயிலைக் கட்டியதாகவும் கூறுவர். இதற்குச் சான்றாக ராஜ கோபுரத்தின் உட்புறமுள்ள கருங்கல்லில் இக்காட்சி சிற்பமாகச் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இந்தக் கோவிலின் மூலஸ்தானத்தின்மேல் நாக லிங்கர் கலசம் கருங்கல்லால்அமைக்கப்பட்டுள்ளது.

## ஓர் அறிவிப்பு!

ஸப்தகிரியில் வெளியிடப்படும் கதை, கட்டுரைகள், கவிதைகள் ஆகியவற்றில் காணப்படும் கருத்துக்கள் அவ்வவ் எழுத்தாளர் பெருமக்களின் தனிப்பட்ட கருத்துக்களேயாம். அவற்றிற்கு 'ஸப்தகிரி' எவ்வகையிலும் பொறுப்பேற்காது.

* * *

சில தவிர்க்க முடியா காரணங்கள் முன்னிட்டு 'இந்திய மருத்துவம்' எனும் கட்டுரை இம்மாத இதழில் இடம்பெறவில்லை. (ஆ-ர்.)

இத்தகைய கலசம் ஒரு சில இடங்களில் மட்டுமே அமைக்கப்பட்டிருக்குமெனக் கூறுவர்.

**கண்ணைக் கவரும் சிற்பங்கள் :**

கோவிலின் நுழை வாயிலில் அமைந்துள்ள ஒற்றைக் கல்லாலான துவார பாலகர் சிலை அழகிய வேலைப்பாடு மிகுந்தவை. கல்யாண மண்டபத்திலுள்ள பல தூண்களில் நுண்ணிய வேலைப்பாடு மிகுந்த சிற்பங்கள் பலவற்றைத் தாங்கி, பார்ப்பவர் கண்ணையும், கருத்தையும் கவர்கின்றன. குதிரையின்மீது அமர்ந்துள்ள குதிரை வீரன் சிலை, யாளி, சிங்கம் ஆகியவற்றின் உருவங்கள், இராமர், திருமால், விநாயகர், மயில் மேலமர்ந்த முருகன் ஆகியவற்றைப் பார்க்கப் பார்க்கத் திகட்டாத அழகுடையவை. மூலையில் சிங்கமும், எருதும் ஒரே தலையுடன் அமைக்கப்பட்டு காண்பவருக்கு இரு தோற்றங்களையும் தருவது போல் அமைக்கப்பட்டுள்ளது சிற்பியின் திறமைக்கு ஒரு எடுத்துக் காட்டாகும்.

**பூஜை நின்ற காரணம் :**

சீரும் சிறப்புமாக விளங்கிய அருள்மிகு அகிலாண்டேஸ்வரி சமேத ஜலகண்டேஸ்வரர் ஆலயம் மராட்டிய, கர்நாடக, முகம்மதிய படையெடுப்புக்களின்போது தாக்குதலுக்கு உட்பட்டது. முகம்மதியர்கள் பலமுறை இக்கோட்டையைத் தாக்கி, இக் கோட்டையினுள் உள்ள ஜலகண்டேஸ்வரர் ஆலயத்திலுள்ள பொருள்களைக் கொள்ளையடித்துச் சென்றனர். கோட்டைக்குள் இக் கோவிலமைந்திருந்ததால், படைகள் தங்குமிடமாகவும் பயன்படுத்தப்பட்டு பூஜையற்ற நிலையையடைந்தது. இக் கோவிலுக்கு அருகிலுள்ள ஏழு ஊர்களை மானியமாக வழங்கப்பட்டு சிறப்பான பூஜை நடந்து வந்த செய்தி இக்கோவில் கல்வெட்டாலறியலாம்.

**முடிவுரை :**

தினமும் அருள்மிகு அகிலாண்டேஸ்வரி சமேத ஜலகண்டேஸ்வரருக்கு வேலூர் நகர பக்தர்கள் தங்கள், தங்கள் பகுதியிலிருந்து புனித நீர் கொண்டு, யானை முன் செல்ல ஊர்வலம் நடத்தி விசேஷ அபிஷேக ஆராதனை செய்து வருகின்றனர். வெளியூர் பக்தர்களும் ஆயிரக்கணக்கில் சென்று இறைவனை வழிபட்டு அருள்பெற்றுச் செல்கின்றனர். கோயினுள் உள்ள திருக்குளம் மண்ணால் மூடப்பட்டுள்ளது. இக் குளத்தைத் தோண்டும் வேலையை பக்தர்கள் ஏற்பாடு செய்து வருகின்றனர்.



---

(38-ம் பக்கத் தொடர்ச்சி)

**இவ்வோவியங்களின் காலம்**

இவ்வோவியங்களின் காலத்தை இனி ஆராய்வோம். இராணி மங்கம்மாள் கி.பி. *1689* ஆம் ஆண்டுமுதல் *1706* ஆம் ஆண்டு முடிய மதுரையை ஆண்டாள். இவள் தனது ஆட்சிக் காலத்தில் மதுரைக் கோயிலுக்கும், பிற கோயில்களுக்கும் திருப்பணிகள் செய்திருக்கிறார். அவை சிற்பங்களாகவும், ஓவியங்களாகவும் இன்றும் காட்சியளிக்கின்றன. மதுரை மீனாட்சியம்மன் கோயில் பொற்றாமரைக் குளத்தின் அண்மையில் உள்ள ஊஞ்சல் மண்டபத்தின் விதானத்தில் தீட்டப்பட்டுள்ள ஓவியம் இராணி மங்கம்மாள் தீட்டுவித்தது. இவ்வோவியத்தில் மங்கம்மாள், அமைச்சர் இராமப்பையர் உருவங்களும், மீனாட்சி திசைக்காவலருடன் போர் புரியும் ஓவியங்களும் காணப்படுகின்றன; இவற்றிற்கு ஆங்காங்கே விளக்கம் தமிழ் மொழியில் எழுதப்பட்டுள்ளது. இது ஏன் இங்கு குறிப்பிடப்படுகிறது என்றால், இவ்வோவியங்களை விடப் பழமை வாய்ந்தது அதிகமான் கோட்டை ஓவியங்கள் என்பதைச் சுட்டிக் காட்டுதற்கே ஆகும்.

எவ்வாறென்றால், இராணி மங்கம்மாள் ஆட்சிக்கு வந்த காலம் கி.பி. *1689*. மறைவு *1706*. ஆண்ட ஆண்டுகள் பதினேழு. ஆட்சிக் காலத் தொடக்கத்தில் இவ்வோவியங்களை எழுதி இருக்கமுடியாது. மங்கம்மாளின் ஆட்சியின் இடைக்காலத்தில் தான் எழுதியிருக்க இயலும். மேலும் விளக்கம் தமிழில் எழுதப்பட்டுள்ளது.

ஆனால் அதிகமான் கோட்டை ஓவியங்களில் காணப்படும் விளக்கக் குறிப்புகள் தெலுங்கு மொழியிலேயே காணப்படுகின்றன. இது ஒன்றே மங்கம்மாள் எழுதுவித்த ஓவியங்களைவிட, அதிகமான் கோட்டை ஓவியங்கள் காலத்தால் முற்பட்டது என்பதைக் காட்டப்போதிய சான்றாகும்.

**காண்பீர் கவின் மிகு ஓவியங்களை**

விஜய நகர நாயக்கர் ஆட்சிக்கு உட்பட்ட பாளையக்காரர்கள் தமிழகத்தின் பல பகுதிகளை ஆண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்களின் ஆளுகைக்கு உட்பட்ட பாளையக்காரர்களால் இவ்வோவியங்கள் எழுதப்பட்டிருக்கவேண்டும். சுமார் *300* ஆண்டுகளுக்கும் மேலாகப் பழமை வாய்ந்த இவ்வோவியங்கள் எழுதப்பட்டிருக்கும் சுண்ணாம்புக் காரைப் பூச்சு ஆங்காங்கே விரிசல் ஏற்பட்டுள்ளது. இருப்பினும் இது இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் பராமரிக்கப்பட்டு வருகிறது. சுற்றுப் பயணிகளின் பார்வைக்கு இது இன்னும் அதிகம் படவில்லை என்றாலும், இச்சிறு கட்டுரை அதற்கு ஓரளவு வழி செய்யும் என்பதில் ஐயமில்லை.



(8-ம் பக்கத் தொடர்ச்சி)

கண்ணனை ஒரு கையால் தூக்கினாள். "வாயைத்திற!" எனக் குழந்தையை அதட்டினாள். கண்ணன் தாமரை வாயைத் திறந்தான். காண்பது கனவா? நனவா? என்றே யசோதைக்குத் தெரியவில்லை. கண்ணன் வாய்க்குள் தெருமண்ணை அவள் காணவில்லை. உலகங்கள் ஏழினையும் அந்தச் சிறு வாய்க்குள் தெரியக் கண்டாள். தன் கணவனாகிய நந்தகோபனும் தானும் கூட அவ்வாய்க்குள் இருப்பதைக் கண்டாள். வியப்பால் யசோதை வாயைப் பிளந்தாள்! யசோதைக்கு மட்டுமா இப்புண்ணியம் கிடைத்தது! அருகிருந்த ஆய்ச்சியருக்கும் இப்பேறுகிட்டிற்று. அவர்கள் செய்த புண்ணியமே புண்ணியம்!

வாயுள் வையகம் கண்ட மடநல்லார்
ஆயர் புத்திரன் அல்லன்அருந்
தெய்வம்
பாய சீருடைப் பண்புடைப் பாலகன்
மாயன் என்று மகிழ்ந்தனர் மாதரே!

## 7. கண்ணன் திருஅவதாரம்

கண்ணன் தெய்வக் குழந்தையே என்பதில் யசோதைக்கு எள்ளளவும் ஐயமில்லை. என்றாலும், வளர்ந்து வரும் அவன் குறும்புத்தனங்களை அவளால் பொறுக்க முடியவில்லை. எனவே, ஒருநாள் அவனை உரலுடன் கட்டிவிட்டாள். "இனி அவன் எவ்வாறு அங்கும் இங்கும் ஓடமுடியும்?" இது யசோதையின் கேள்வி. எனவே யசோதை நிம்மதியாகத் தன் வேலையில் ஈடுபட்டாள்.

யசோதை இல்லாத சமயம் பார்த்துக் கண்ணன் உரலையே இழுத்துத் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தான். யசோதையின் தோட்டத்தில் மருதமரங்கள் இரண்டு வளர்ந்திருந்தன. அவற்றுக்கிடையே புகுந்து வெளியே வந்தான் கண்ணன்! அவ்வாறு வெளி வரும் போது உரல் மரத்துக் கிடையே சிக்கிக் கொண்டது. எனவே, உரலை வேகமாக இழுத்தான். இழுத்த வேகத்தில் மருதமரங்கள் இரண்டும் அடியோடு பெயர்ந்து வீழ்ந்தன. நளகூபரன், மணிக்ரீவன் என்னும் அரக்கரே மருதமங்களாக நின்றவர்கள். முறிந்து வீழ்ந்த அவ்விருவரும் முன்னைச்சாபம் நீங்கிப் பொன்னுலகம் சேர்ந்தனர்.

கண்ணன் நன்றாகநடக்கத்தொடங்கி விட்டான். எனவே, ஆயர்குலச் சிறுவர்களோடு சேர்ந்து கொண்டு பசுக்களை மேய்க்க அவர்களோடு போகத் தொடங்கினான். மேய்ப்பனாகிய கண்ணன் வழக்கம் போல ஒரு நாள் மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்தான். வத்சாசுரன் என்பவன் கன்று வடிவங் கொண்டு கன்றுகளோடு கன்றாகக் கலந்து கொண்டு கண்ணனைக் கொல்லக் காலம் பார்த்திருந்தான். கபித்தாசுரன் என்பவனும் விளாமரத்தின் வடிவில் கண்ணனைக்கொல்லத் தயாராக இருந்தான். கண்ணனோ, கன்றின் பின்னங்கால்கள் இரண்டினையும் பற்றி விளாமரத்தின் மேல் ஏறிந்தான். விளாமரமும் கன்றும் ஒரு சேர வீழ்ந்து இறந்தன. வஞ்சகத்தை வஞ்சகமாகவே மாய்த்தான் மாயவன்!

பசுக்களை மேய்த்து வந்த கண்ணன் நீருட்டுவதற்காகப் பசுக்களை நீர்த்துறைக்கு ஓட்டி வந்தான். அப்போது பகாசுரன் என்பவன் கொக்கு வடிவத்துடன் கண்ணனைக் கொல்லக் காத்துக் கொண்டிருந்தான். கொக்கின் அலகுகளைப்பிடித்து விளையாடும் பாவனையில் அதன் வாயைக் கிழித்துக் கொன்றான் கண்ணன். இதனை அகாசுரன் என்பவன் அறிந்தான். பகாசுரன் தம்பி அகாசுரன் அண்ணனைக் கொன்ற கண்ணனைக் கொல்வதற்காக மலைப்பாம்பின் வடிவமெடுத்து மடுக்கரையில் கிடந்தான். இதனையுணர்ந்த கண்ணன் ஆயர் குலச் சிறுவர்களையெல்லாம் கூவியழைத்தான். "தோழர்களே! இங்கே வாருங்கள் இம்மலைப்பாம்பைப் பாருங்கள்!" என்று கூறிக்கொண்டே அவர்கள் கண்ணெதிரிலேயே அதன் கழுத்தைக் கிழித்துக் கொன்றான். இதனைக்கண்ட இடைக்குலச் சிறுவர்கள் கண்ணனின் வீரதீரத்தை வாயாரப் பலவாறு கூறிப் புகழ்ந்தனர்.

கண்ணனுக்கு ஐந்த வயது நிரம்பலாயிற்று.

பலராமனும் ஆயர்குலச் சிறுவரும் தன்னைச் சூழ்ந்து வரக் கண்ணன் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்தான். தேனுகாசுரன் என்பவன் கழுதை வடிவம்கொண்டு கண்ணனைக் கொல்ல வந்தான். கழுதையின் பின்னங்கால்களைப் பிடித்துக் கரகரவெனக் சுழற்றிப் பனைமரம் ஒன்றின் மீது மோதினான் கண்ணன். கழுதை கத்திக்கொண்டே மாய்ந்து போயிற்று. மாடுகளை மேய்த்துக் கொண்டே, தன்னைக் கொல்லவரும் அசுரர்களையும் மாய்த்துக்கொண்டே வந்தான் கண்ணன்!

மாடுகளை ஓட்டிக் கொண்டு ஒரு நாள் ஒருபக்கமாகச் சென்றான் கண்ணன். அந்தப் பக்கமாகச் செல்ல வேண்டாமென்று ஆயர்குலச் சிறுவர் அவனை எச்சரித்தனர்.

"கண்ணா! அந்தப் பக்கமாகப் போகாதே. அங்கொரு மடு இருக்கிறது. அம்மடுவின் தீவில் காளியன் எனப்படும் ஐந்து தலைப் பாம்பு ஒன்று உள்ளது. அப்பாம்பு தன்னிடமுள்ள நஞ்சைக் கக்கி நீரையெல்லாம் நஞ்சாக்கி விடுகிறது. அந்த நீரை யுண்டோர் இறந்தே போவர். மேலும், அங்குச் செல்பவர்களையும் அந்த நாகம் கொன்று போட்டு விடுகிறது. எனவே, நீ செல்ல வேண்டாம்!" என்று கூறிக் கண்ணனை மடுவின் பக்கமாகச் செல்ல வொட்டாது தடுக்க முயன்றனர். கண்ணனா இவர்கள் பேச்சைக்கேட்பான்! காளியனைக் கொல்ல வேண்டும் என்று தனக்குள்ளே எண்ணினான். எனவே, மடுவை நோக்கி நடந்தான்.

மடுவின் கரையில் கடம்பமரம் ஒன்று இருந்தது. கண்ணன் அதன் மேல் ஏறி மடுவில் குதித்தான். தன்னைக் கொல்லச் சீறி வந்த காளிய

னின் தலையைப் பற்றினான். அதன் வலிமையடங்கும் வண்ணம் அதன் தலைமேல் ஏறிக் குதித்தான். நடனமாடுவது போலவே இது காணப்பட்டது. கண்ணனின் நர்த்தனங்கண்டு கதிகலங்கினர் நாககன்னியர். மாங்கல்யப் பிச்சையளிக்குமாறு மாயவனை வேண்டி நின்றனர். மனமிரங்கிய கண்ணன் காளியனைக்கொல்லாது விட்டான். கடலில் சென்று வாழுமாறு காளியனைப் பணித்தான். மடுவைப் பிடித்தபயம் கண்ணபிரானருளால் நீங்கியது.

மற்றொருநாள், குருந்த மரமாகி நின்று தன்னைக் கொல்ல நினைத்த அசுரனைத் தன் கைகளால் முறித்து அழித்தான். கம்சனால் ஏவப்பட்ட எல்லாக்கொடியவர்களையும் பகவான் ஒவ்வொருவராகக் கொன்றொழித்தான். பகைவர்களை விளையாட்டாகவே களைந்து விட்டான். பசுக்களாகிய உயிரைப் பரவசப்படுத்துவதும் அவன் திருவிளையாடலாகவே இருந்து வந்தது. கண்ணனின் குழலோசைக்கு மயங்காத உயிரினங்களே இல்லை. அவன் குழலூதும் அழகினைப் பாருங்கள்!

சிறுவிரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்யவாய்
கொப்பளிப்பக்
குறுவெயர்ப் புருவம் கூடலிப்பக்
கோவிந்தன் குழல்கொடு ஊதின
போது
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்திறங்கிச்செவி யாட்டகில்
லாவே!

கண்ணன் இசைத்த கானத்தில் பசுக்கள் மயங்கிய நிலை இது! ஆய்ப்பாடியில் ஆய்ச்சியர் அடைந்த இன்ப நிலையினையும் சிறிது காண்போம்.

ஒரு சமயம், யமுனையாற்றங் கரையில் இருந்துகொண்டு கண்ணன் வேணுகானம் செய்தான். புல்லாங்குழலின் இனிமையாலே ஆய்ச்சியர் ஈர்க்கப்பட்டனர். தங்கள் கணவன்மாரையும், மனைவியரையும் கூட மதிக்காமல் அனைவரும் ஆற்றங்கரையில் வந்து கூடினர். இசையின் இனிமையில் தம்மையே மறந்து நின்றனர். அன்றிரவு முழுவதும் கண்ணனோடேயே காலங் கழித்தனர். லீலைகள் பல செய்து ஆயர் குல மகளிரை அன்புக் கடலில் ஆழ்த்தினான் கண்ணன்!

திருமணமாகாத கன்னிப் பெண்கள் ஆய்ப்பாடியில் கூடினர். கண்ணனே தங்கட்குக் கணவனாக வாய்க்க வேண்டும் என்று நோன்பு நோற்றனர். நோன்பின் இறுதியில் யமுனையில் நீராடினர். நீராடும் பொழுது, ஆயர்குல வழக்கப்படியே ஆடைகளை அவிழ்த்துக் கரையில் வைத்தனர். களைந்த ஆடைகளைக் கவர்ந்து கொண்டு விளையாடினான் கண்ணன். ஆய்ச்சியர் கைகூப்பி வணங்கிய பின்னரே ஆடைகளைத் தந்து அருள்பாலித்தான்.

கோபியரின் ஆவல் தீரும்படி அருள் புரிய விரும்பினான் கோபாலன். ஆய்ச்சியர் குரவைக் கூத்து ஆடும்பொழுது ஒவ்வொரு ஆய்ச்சியர் அருகிலும் கண்ணன் இருந்து ஆடினான். எண்ணிலடங்காக் கண்ணன் வடிவம்! எங்கும் கண்ணன் மயம்! ஆயர்குலக் கன்னியர் அகம்மகிழும்படி அனைவரையும் திருமணம் புரிந்து அருளினான். கண்ணனின் லீலைகள் ஆயர்களுக்குக் கழிபேருவகையைத் தந்தன.

மழைக் காலம் வந்தது. தங்கள் வழக்கப்படி மேகங்கட்குத் தலைவனான இந்திரனுக்கு வழிபாடு செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தனர் ஆயர்கள். இவற்றைக் கண்ட கண்ணபிரான், ''அன்புக்குரியவர்களே! நமக்கு வாழ்வளிப்பவை ஆடுகளும் மாடுகளுமே! இவை வாழப் புல்லும் நீரும் தந்து புரப்பது இக் கோவர்த்தன கிரியே! இம் மலைக்குப் பொங்கலிட்டுப் பூசை செய்வதே நன்றியுள்ள செயல்!'' என, கண்ணனைத் தெய்வமாகவே கருதி வரும் ஆயரும் இக் கருத்துக்கு உடன்பட்டனர். அனைவரும் மலைக்குச் சென்று பொங்கலிட்டுப் பூசை செய்யத் தொடங்கினர்.

வழக்கமாகத் தனக்குச் செய்யும் விழா தடைப்பட்டதறிந்தான் இந்திரன்! ஏழு மேகங்களையும் அழைத்தான். இடியுடன் மழை பெய்து ஆயர்களின் பூசையைக் கலைக்குமாறு ஆணையிட்டான். திடீரென்று இடியும் மழையும் வரக் கண்ட ஆயர் அங்குமிங்கும் ஓடலாயினர். அவர்களையெல்லாம் கண்ணபிரான் அழைத்து அமைதிப்படுத்தினான். கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்தான். ஆயர்களும், ஆடுமாடுகளும் அச்சமின்றி வாழ அருள் புரிந்தான்.

இங்கே இவ்வாறு இருக்க, தன்னால் ஏவப்பட்ட அசுரர்கள் அனைவரும் மாண்டு போவதறிந்து மனங் கலங்கினான் கம்சன்! கண்ணனை வஞ்சகமாக அழைத்துக் கொலை புரியத்

## கவனத்திற்கு....

திருமலையானின் பெருமையைப் பற்றி குறைந்தபட்சம் 20 நபர்களுக்கு கடிதம் எழுத வேண்டும் என்றும், அப்படி எழுதினால் நன்மை உண்டாகும், இல்லையெனில் கேடு வரும் என்றும், முதல் கடிதம் 'இறைவனிடமிருந்து வந்தது' என்றும் கூறி, பலர் தங்களை ஏமாற்றிக் கொண்டு பிறரையும் தெரிந்தோ தெரியாமலோ ஏமாற்றி அச்சுறுத்தி வருகின்றனர். தயவு செய்து, இது போன்ற கடிதங்களுக்கோ, 'நோட்டீஸ்'களுக்கோ மதிப்பளிக்காதீர்கள் என்று பொது மக்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

— ஆர்.

திட்டமிட்டான். கண்ணனை அழைத்து வர அக்ரூரர் என்பவரை அனுப்பி வைத்தான். வில் விழா வைக் காண வருமாறு அக்ரூரர் கண்ணனை அழைத்தார். கம்சன் மாளிகையில் நடக்கும் வில் விழா வைக் காணக் கண்ணன் அக்ருரருடன் புறப்பட்டான். வஞ்சக நெஞ்சினனாகிய கம்சனின் சதித் திட்டத்தைக் கண்ணன் புரிந்து கொண்டான். எனவே, வில் விழா நடைபெறும் ஆயுத சாலைக்கு நேரே சென்றான்; விளையாட்டாக வில்லையெடுக்கும் பாவனையில் அவ்வில்லையெடுத்து முறித்துப் போட்டான்!

பின்னர், ஆயுதசாலையிலிருந்தும் புறப்பட்டுக் கம்சனின் அரண்மனையை அடைந்தான் கண்ணன். கண்ணனுடன் பலராமரும் யாதவ வீரரும் சென்றிருந்தனர். இவர்கள் எதிரே யானையொன்று வந்தது. அதன் பெயர் குவலயா பீடம் என்பது. அது கம்சனால் ஏவப்பட்ட யானை! கண்ணனைக் கொல்லக் கடுங் கோபத்துடன் அக் களிறு வந்தது. வந்த யானையின் தந்தத்தை ஒடித்தனர் யாதவ வீரர்! ஒடித்தெடுத்த தந்தத்தைக் கொண்டு அதன் உடலைக் குத்திக் கொன்றனர். இது கண்ட பெருமல்லர் பலர் யாதவ வீரரை எதிர்த்தனர். எதிர்த்த வீரரை எடுத்தெறிந்து கொன்றான் கண்ணபிரான். பின்னர், கம்சனின் அரண்மனைக்குள் நுழைந்தார்; அரசு கட்டிலில் அமர்ந்திருந்தான் கம்சன்! கண்ணனைக் கண்டதும் கடும் பாம்பைப் போல் சீறினான். கண்ணபிரான் கருடனைப் போலக் கம்சனை நோக்கிப் பாய்ந்தார். கம்சனின் தலைமயிரைப் பற்றினார். அவனைக் கீழே தள்ளினார். அவன் மேல் ஏறியமர்ந்து அவனைக் கொன்று அருள் புரிந்தார்.

கம்சவதத்துக்குப் பின் கண்ணனுக்குக் கலை பயில நாட்டம் சென்றது; எனவே, நல்லாசிரியர் ஒருவரை நாடலானார். அவந்தி நகரில் வாழும் சாந்திபிநி என்னும் முனிவரே ஏற்றவர் என அறிந்தார். அண்ணனையும் அழைத்துக் கொண்டு அவந்தியை அடைந்தார். குருவை வணங்கி நின்றார். கலைகள் பல வற்றையும் அறுபத்து நான்கு நாளைக்குள் கற்றுத் தேர்ந்தார். மாண்டு போன மைந்தனை மீண்டும் கொண்டுவந்து குருவின் முன்னே நிறுத்தினார். தன் மகனை உயிருடன் பெற்ற குருவும் மனம் மகிழ்ந்து விடைகொடுத்தனுப்பினார். பின்னர், கண்ணனும் பலராமனும் வட மதுரை வந்து சேர்ந்தனர்.

அப்போது, சராசந்தன் என்பவன் மகத தேசத்தை ஆண்டு வந்தான். தன் மகளிர் இருவரையும் கம்சனுக்குத் திருமணம் செய்து கொடுத்திருந்தான். "கம்சனைக் கண்ணன் கொன்று விட்டான்!" என்ற செய்தி கேட்டுக் கம்சன் மனைவியர் கதறியழுதனர். மகத நாடு சென்று தன் தந்தையின் காலடியில் வீழ்ந்து பலவாறு கூறிப் புலம்பியழுதனர். தன் மக்களின் நிலை கண்டு கொதித்தெழுந்தான் சராசந்தன். கண்ணன் மீது போர் தொடுத்து விட்டான். சராசந்தனுடைய வீரர்களும் யாதவ வீரர்களும் கடுமையாகப் போர் புரிந்தனர். சராசந்தன் தேர் மீது ஊர்ந்து வந்தான். சராசந்தனைக் கண்ட பலராமர் இரும்புலக்கை ஒன்றை அவன் மீது வீசினார். வருணபாசத்தைக் கொண்டு சராசந்தனைக் கட்டி விட்டார். வானவர் மகிழ்ந்து போற்றினர். கண்ணன் இதனைக் கண்டான். சராசந்தனை விட்டு விடுமாறு பலராமரை வேண்டிக் கொண்டான். விடுபட்ட சராசந்தன் மானமிழந்து, மதியிழந்து, நாணித் தலை குனிந்து சென்று விட்டான்.

வீரம்பல விளைத்த கண்ணனுக்கு விவாகப் பருவம் வந்தது. விதர்ப்பம் என்றொரு நாடு. அதன் தலைநகரம் குண்டினபுரம் என்பது. அதனைப் பீஷ்மகன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அம்மன்னனுக்கு உருக்மி என்றொரு பிள்ளையும், உருக்குமிணி என்றொரு பெண்ணுமிருந்தனர். சேதி நாட்டு மன்னன் சிசுபாலனுக்குத் தன் தங்கையைக் கொடுக்க உருக்மி விரும்பினான். கண்ணனோ உருக்குமிணியைத் திருமணம் புரிந்து கொள்ள விரும்பினான். காரணம், உருக்குமிணி மகாலட்சுமியின் அவதாரம் என்பதே!

உருக்குமிணிக்குச் சுயம்வர ஏற்பாடு நடைபெற்றது. பல நாட்டு மன்னர்களும் வந்து குழுமினர். கண்ணனும் அண்ணன் முதலானோருடன் சென்றிருந்தான். சுயம் வரத்துக்கு முந்தின நாள் யாருமறியா வகையில் உருக்குமிணியைக் கவர்ந்து கொண்டு கண்ணன் முதலானோர் சென்று விட்டனர். தந்தவக்கிரன் முதலான மன்னர் பலர் கண்ணனை எதிர்த்தனர். எதிர்த்த மன்னர்களைக் கண்ணனும் பலராமனும் புற முதுகு காட்டி ஓடுமாறு செய்தனர். பின்னர், உருக்மி வந்து கண்ணனை எதிர்த்தான். அவனைப் பிடித்துத் தன் தேர்க் காலில் கட்டினான் கண்ணன். மைத்துனன் என்பதால் அவனைக் கொல்லாமல் மொட்டையடித்து மான பங்கம் செய்து அனுப்பி விட்டான். பின்னர் முறைப்படி கண்ணனுக்கும் உருக்குமிணிக்கும் இனிதே திருமணம் நடைபெற்றது. சில நாட்கள் சென்றன. சத்திரசித்து என்னும் மன்னனின் மகளாகிய சத்திய பாமையையும் கண்ணன் திருமணம் புரிந்து கொண்டான். பாமா ருக்மிணி சமேதராகக் கண்ணன் காட்சியளித்தான்.

ஒரு சமயம், இந்திரன் வந்து கண்ணன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்; தனக்கு நேர்ந்த குறைகளை முறையிட்டுக் கொண்டான்.

"ஐயனே! நரகாசுரன் என்பவனால் நான் படும் துன்பம் கொஞ்ச நஞ்சமன்று. என் ஐராவத யானையை அவன் அபகரித்துக் கொண்டு போய்

விட்டான். ஆயிரக் கணக்கான மக ளிரைச் சிறைப்படுத்தி விட்டான். என் தாயின் குண்டலங்களையும் பறித்துக் கொண்டான். அவன் தரும் தொல்லைகளிலிருந்து தாங்களே என்னைக் காப்பாற்ற வேண்டும்.''

கருணை வள்ளலாகிய கண்ணபிரான் இந்திரனின் குறைகளைக் கேட்டரு ளினன். கருடனை அழைத்தான். அதன் மேல் ஏறியமர்ந்து கொண் டான். ப்ராக் சோதிடம் எனப்படும் பட்டணத்தை அடைந்தான். அங்கு தான் நரகாசுரன் வாழ்ந்து வந்தான். நரகனின் அமைச்சன் முரன் என் பவன். அவன் கண்ணபிரானை எதிர்த் தான். எதிர்த்த முரனைக் கொன் முன் கண்ணன். பின்னர், நரகன் வந்து எதிர்த்தான். நரகனைக் கண் ணனின் சக்கராயுதப்படை அறுத்துத் தள்ளியது. ''முரஹரி! நரஹரி!'' என வானோர் கண்ணனை வாயாரப் போற்றி மகிழ்ந்தனர். பின்னர், வானுலகில் மணம் பரப்பிக் கொண் டிருந்த பாரிசாத தருவைக் கொண்டு வந்து சத்திய பாமையின் தோட்டத் தில் நாட்டினார்.

கண்ணபிரானுடன் படித்த ஒரு சாலை மாணவர் குசேலர். தான் உண் ணும் போதெல்லாம் குசேலர் தன் நண்பனாகிய கண்ணனை நினைத்துக் கொள்வார். அத்தகைய ஆழமான நட்பு! குசேலர் மனைவி சுசீலை. தன் குடும்ப வறுமையினைப் போக்கிக் கொள்ளச் சுசீலையின் விருப்பப் படியே குசேலர் கண்ணனை நாடிச் சென்றார். நண்பனைக் கண்ட கண்ணன் குசேலருக்கு நல்ல உபசாரங்கள் செய்தான். ஆனால், ஒன்றும் கொடுக் காமலேயே வெறுங்கையுடன் குசே லரை அனுப்பி வைத்தான். வீடு வந்த குசேலருக்கு வியப்பாகப் போய் விட்டது! குடிசை மாளிகையாகக் காட்சியளித்தது! குழந்தைகளும் மனைவியும் குபேர சம்பத்துடன் வாழ்ந்து வந்தனர்! இது கண்ணனின் திருவிளையாடல்! சொல்லாமல் செய் வர் பெரியரன்றோ!

மற்றொரு நாள் கண்ணன் இந்திரப் பிரத்தம் சென்றான். இந்திரப் பிரத் தம் என்னும் நகரில் பஞ்சவருள் மூத்தவரான தருமபுத்திரர் இராச சூய யாகத்தை வெற்றிகரமாகச் செய்து முடித்தார். யாக முடிவில் முதல் மரியாதையைக் கண்ணனுக்கு அளித்தார். இதுகண்ட சிசு பால னுக்கு ஆத்திரம் பொங்கிற்று. 'இடையன்' என்றும், 'மடையன்' என்றும் கண்ணனைப் பலவாறாக ஏசி னான். நூறு பிழைவரை கண்ணன் பொறுத்தான். அதற்கு மேலும் சிசுபாலன் கண்ணனைப் பழித்துக் கொண்டே இருந்தான். பொறுமைக் கும் ஓர் எல்லையுண்டு அல்லவா! பொங்கி யெழுந்தான் கண்ணன்; சக் கரப்படை சிசுபாலன் தலையைத் துணித்தது!

நாட்கள் பல கடந்தன. பாண்ட வர்க்கும் கௌரவர்க்கும் இடையே போர் மூண்டது. இரு குடும்பத் தாரையும் ஒற்றுமைப்படுத்த எண் ணினான் கண்ணன்! எனவே, துரியன் பால் தூது சென்றான். தூது வந்த கண்ணனைச்சூழ்ச்சி செய்து கொல்லத் திட்டமிட்டான் துரியன்! துரியன் தனக்கிட்ட பொய்யான ஆசனத் தைக் கண்ணன் பொடிப் பொடி யாக்கினான். ஆசனத்தின் கீழ் மறைந் திருந்த மல்லர்களை அழித்தான். பின் னர், பாரதப் போர் நடைபெற்றது. கண்ணன் பாண்டவர்க்குத் துணையாக அமைந்தான். பார்த்தனுக்குத் தேரோட்டும் சாரதியாகவும் அமைந் தான். களங்கண்டு கலங்கிய பார்த் தனுக்குக் கீதோபதேசம் செய்தான். பாண்டவர்க்கே வெற்றியை யுண் டாக்கி அருள் புரிந்தான்.

பாரதப்போர் முடித்துக் கண்ணன் துவராகாபுரியில் வீற்றிருந்தான். அப்போது, மண்ணிலும் விண்ணிலும் தீக்குறிகள் காணப்பட்டன. யாதவர் கள் கண்ணனைச் சரணடைந்தனர். சரசுவதி நதியில் நீராடினால் தீமை கள் அகலும் என்று உபாயம் கூறி னான் கண்ணன்! அதன்படியே, யாத வர்கள் சரசுவதி நதியில் நீராடினர். யுக முடிவைக் கருத்தில் கொண் டான் கண்ணன். எனவே, தன் மாய வேலையைத் தொடர்ந்தான். கண்ண னின் மாயையால் நீராடி நோன்பு நோற்ற யாதவர்க்குப் புத்தி பேத லித்தது. கோரைப் புற்களைக் கொண்டு ஒருவரை யொருவர் தாக் கினர், முடிவில் அனைவரும் மாண்டு போயினர்.

அனைவரும் மாண்டு போன பின், அரசமரம் ஒன்றின்கீழ் வந்தமர்ந் தான் கண்ணன்! சங்கு சக்கரதாரி யாகப் பட்டுப் பீதாம்பரத்துடன் வீற்றிருந்தான். அப்போது, கண்ண னின் காலடியில் அம்பு ஒன்று வீழ்ந்து தைத்தது. சரன் என்னும் வேடன் மானுக்குக் குறி வைத்து அம்பு விட் டான். அந்த அம்பே அது! நிகழ்ந்த தறிந்த வேடன் கண்ணன் திருவடி களில் வீழ்ந்து கதறினான். கண்ண பிரான் வேடனைப் பார்த்துக் கூற லானான்:

''வேடனே! எதற்காக வீணில் வருந்துகிறாய். எல்லாவுயிர்களிலும் நானே இருக்கிறேன். உன் செயல் யாவும் என் செயலே! உனக்குப் பொன்னுலகம் அளிக்கிறேன். அங்கே போய்ச் சுகமாக இரு!''

அதன் பின்னர், கண்ணனின் தேர்ப் பாகன் தாருகன் என்பவன் அங்கே வந்து சேர்ந்தான். தெய்வ வடிவாகி நிற்கும் கண்ணனைப் பணிந்தான். பாகனை நோக்கிக் கண்ணன் பகர்ந் தான்!

''பாகனே! வசுதேவர்க்கும் தேவ கிக்கும் யாதவர்கள் மாண்டு போன செய்தியைச் சொல். நான் மீண்டு போவதையும் நயமாகச் சொல். இன் னும் ஏழு நாட்களுக்குள் இத்துவார காபுரி கடலால் கொள்ளப்படும். எனவே, துவாரகாபுரியில் உள்ளவர் களை இந்திரப் பிரத்தம் அனுப்பிவிடு. அருச்சுனனுக்கும் நிகழ்ந்த வற்றைக் கூறு.''

இவ்வாறு புகன்ற மாயன் தேவர் மூவர் தொழுது நிற்கச் சோதி வடி வுடன் வைகுந்தம் சேர்ந்தான்! கண் ணனின் செயல்கள் ஒவ்வொன்றும் தத்துவத்தை உள்ளடக்கியவை. கண் ணனின் நாமம் உரைப்போர் நலம் பல பெற்று உயர்வர். நாமும் கண் ணன் திருவடியைச் சிந்திப்போமாக!

(தொடரும்)

 

# செய்திச் சுருக்கம்

 

## ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீதா மாலிகா

இந்தியா புக் அவுஸ் ஒத்துழைப்புடன் தி. தி. தேவஸ்தானத்தாரின் அன்னமாச்சார்யா திட்டத்துறையின் சார்பில் திருமலையில் சதஸ் அரங்கில் அன்னமாச்சாரியார் கீர்த்தனைகளைக் கொண்ட 'பதிவு நாடா தொகுப்பு' களை வெளியிடும் வகையில் 'ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீதா மாலிகா' எனும் விழா வெகு விமரிசையாக 30-10-81 அன்று கொண்டாடப்பட்டது. இவ்விழாவிற்கு தி.தி.தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் தலைமை வகித்து உரையாற்றுகையில், அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமையை விளக்கிடும் வகையில் பணி பல மேற்கொண்டு செயற்படும் தி. தி. தே. திட்டங்களை விளக்கிக் கூறி, விரைவில் திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தாரால் ரூ. 65/- இலட்சம் செலவில் 'ஒலிப்பதிவுக் கூடம்' ஒன்றினை அமைக்க உள்ளதாகக் குறிப்பிட்டு, ஸ்ரீ காளஹஸ்தி வித்யா பிரகாஸானந்தகிரி சுவாமிகளின் பகவத் கீதைச் சொற்பொழிவுகளை விரைவில் பதிவு செய்யவும் தி. தி. தே. முடிவு செய்துள்ளது என்றும் கூறினார்.

தொடர்ந்து இவ்விழாவில் முக்கிய பங்கேற்று, அன்னமாச்சார்யா திட்டத் துறையினைச் சார்ந்த குமாரி. ஆர். ஜி. ஷோபாராஜு மற்றும் திரு ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் அவர்களால் பாடப்பெற்று பதிவுச் செய்யப்பட்ட 30 அன்னமாச்சாரியா கீர்த்தனைகளைக் கொண்ட மூன்று பதிவு நாடா தொகுப்புகளையும், திரு. எம். டி. ராமநாதன் அவர்களால் வயலின் கருவிகொண்டு இசைக்கப்பட்ட கீர்த்தனைகளின்பதிவுநாடா தொகுப்புஒன்றினையும் வெளியிட்ட ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. பி. வி. சௌத்ரி அவர்கள் தம் சிறப்புரையில், தியாகராஜரின் கீர்த்தனைகளைப் போன்றே, ஸ்ரீ அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமையைப்பரப்ப தி. தி. தே. மேற்கொண்டு வரும் முயற்சிகளை பாராட்டிப் பேசினார். பின்னர் தி.தி.தேவஸ்தானத்தாரின் நிதிஉதவியுடன் வெளியிடப்பட்டதும் திரு. ராணி ஸ்ரீநிவாச சாஸ்திரி அவர்களால் எழுதப்பட்டதுமான 'பாரதீய விக்ஞான ஸர்வஸ்வம்' எனும் தெலுங்கு நூல் ஒன்றினையும் வெளியிட்டார். தொடர்ந்து 'பதிவு நாடா தொகுப்பு' பணியில் ஈடுபட்ட கலைஞர்களையும், மேற்படி நூலாசிரியரையும் பொன்னாடை போர்த்தி கௌரவித்தார். 'இப்பதிவு நாடா தொகுப்பு' விற்பனைப் பொறுப்பினை ஏற்றுக் கொண்ட இந்தியா புக் அவுஸ் சார்பில், இறுதியில், தன் நிறுவனத்தாரின் சார்பில் முக்கிய விருந்தினர்களுக்கு, மேற்படி

## பஜனை

ஸகல ஐஸ்வர்யங்களையும் பூர்ண ஆயுளையும் கொடுக்கும் நமது இஷ்ட தெய்வத்தின் குணங்களையும், பெருமைகளையும் கூறி ஆடிப்பாடுவதுதான் பஜனை எனப்படும். இச்சொல் பஜந் என்ற வடமொழிச் சொல்லிலிருந்து வந்ததாகும். பக்தி பூாவம், ராகம், தாளம், ஸ்ருதியுடன் மாசறகற்ற பெரியவர்கள் மத்தியில், நேரம், காலம், வீடு, மனை, மக்கள், சுற்றம், பந்தம், பாசம், கவலை அனைவற்றையும் மறந்து செய்யும் படியான செயல் பஜனை எனப்படும். சில நாட்கள் நம்முடன் தங்கிச் செல்லும் உறவினர்களை வண்டி ஏறி புறப்படும் பொழுது அவர்கள் நன்றி உணர்ச்சியை, கண்ணீர்மூலம் வெளிப்படுத்துவதுபோல் எவ்வளவோ உதவிகள் செய்யும் பரமாத்மாவிற்கு நன்றி கடன் செலுத்தி கண்ணீர் மல்க நாம் ஆடிப்பாடும் செயலே "பஜனை" எனப்படுவதாகும். இந்தபுனிதமான சொல்லுக்கு படித்தவர்கள் குறைந்தபல்வேறு பகுதிகள்வாழும் மக்களிடம் உள்ள மரியாதைகூட நம் படித்த தமிழ் மக்களிடம் இல்லை. படித்தவர்கள் இச்சொல்லை உபயோகிக்கக் கூடாத இடத்தில் உபயோகின்றனர். பேராசிரியர் முதல் கடைசி வர்க்கத்தினர் வரை இச்சொல்லை தவறுக உபயோகிக்கின்றனர். எனவே, இந்நிலை மாற வேண்டும் என்பது அடியேனின் தாழ்ந்த வேண்டுகோள். கலியில் மிகச் சிறந்த முக்தி தரும் மார்க்கம் பஜனை என்ற ஒன்றுதான்.

சி. கே. கிருஷ்ணமூர்த்தி ராவ்,
பல்லாவரம்.

'பதிவு நாடா தொகுப்புக்களை' திரு. மனோகரன் அவர்கள் வழங்கினர். இறுதியில் அன்னமாச்சார்யா திட்டத்துறை கலைஞர்கள் பங்கேற்ற இசை நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது.

# மதிப்புரை

## ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த

# தயாசதகம்

கிடைக்குமிடம்:

என். எஸ். வி. ராகவன்,
166, கோவிந்த ராஜஸ்வாமி ஸந்நிதி தெரு
திருப்பதி.

விலை. ரூ. 1/-

இந்நிலவுலகில் பிறவியை எடுத்த மனிதர்களுள் நற்காரியங்களைச் செய்பவர் மிகச் சிறுபான்மையார்தான். கெட்ட காரியங்களை தெரிந்தும் தெரியாமலும் செய்பவர்தான் மிகுதியாக உள்ளனர். ஒவ்வொரு க்ஷணமும் அவரவர் செய்யும் கெட்ட காரியங்களை நினைத்துப் பார்த்து எப்படி இவர்கள் கதியை எய்துவர்களோ என்று பெரியோர்கள் வருந்துகின்றனர். எம்பெருமானுடைய தயையின்றி வேறொரு நற்காரியத்தைச் செய்து பாபிகள் உஜ்ஜீவிக்க வழியில்லை. இக்கலியுகத்தில் எம்பெருமானுடைய கருணையை எளிய உபாயத்தினால் பெறலாமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லி அவனைத் துதித்தால் அவன் கருணை கூர்ந்து பாபங்களைப் பொறுத்து நற்கதியை அருள்கின்றான். அதற்காகவே பெரியோர்கள் ஸ்தோத்திர நூல்களை அருளிச் செய்தனர். அவற்றுள் எம்பெருமானுடைய தயா குணத்தைத் துதிப்பதற்காக நிகமாந்த மஹா தேசிகன் அருளிச் செய்த தயாசதகம் மிகவுயர்ந்தது. கலியுக தெய்வமான திருவேங்கடமுடையானுடைய தயாகுணத்தைப் போற்றும் இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பவர்கள் திருவேங்கடமுடையானுடைய அருளுக்கு இலக்காகி வேண்டிய பயன்களைப் பெறுவர் என்பது திண்ணம்.

இந்த ஸ்தோத்திரத்தை தேவநாகரி எழுத்து தெரியாதவர்கள் கூட படித்துப் பயன்பெற வேண்டுமென்பதற்காக ஸ்ரீ என். எஸ். வி. ராகவன் என்பவர் தமிழ் எழுத்தில் இந்நூலை வெளியிட்டுள்ளார். இது தமிழர்களுக்கு ஓர் பெரிய விருந்து.

இதைப் பெற்று தினமும் பாராயணம் செய்து நற்பயனைப் பெற வேண்டுகின்றேன்.

என். எஸ். ராமானுஜ தாதாசாரியர்,
கேந்த்ரீய ஸம்ஸ்க்ருத வித்யாபீடம்
திருப்பதி.

## ஆண்டு விழா

சென்னையிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் தகவலறிவிப்பு நிலையத்தின் 32-வது ஆண்டு விழாவும், வருடாந்திர 'சுப்ரபாத போட்டி முடிவு' விழாவும் வெகு விமர்சையாகக் கொண்டாடப் பட்டது. இவ் விழாவிற்கு, ஓய்வு பெற்ற நீதிபதி டி. ராம பிரஸாத்ராவ் அவர்கள் தலைமை வகிக்க, திரைப்பட உலகைச் சார்ந்த திரு. டி. புல்லையா அவர்கள் சுப்ரபாத போட்டியில் வெற்றி பெற்ற மாணவமாணவிகளுக்குப்பரிசுகள் வழங்கினர், இதற்கு முன்னர் டாக்டர். சுதர்ஸன் அவர்கள் ஆண்டறிக்கையினை வாசிக்க, முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் திரு. ரேபால லக்ஷ்மி நரஸாரெட்டி அவர்கள் முக்கிய விருந்தினராக பங்கேற்றார். இவ்விழாவிற்கு வருகை புரிந்தோரை தி. தி. தே. பொதுமக்கள் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்யநாராயணராவ் அவர்கள் வரவேற்றார். அதுபோது, அவர் தம் உரையில் வெகு விரைவில் சென்னையில், திருமண மண்டபம், வழிபாட்டுக் கூடம், சமய நூலகம் ஆகியன கொண்டு விளங்கும்படியான தி.தி. தேவஸ்தான கட்டிடத் தொகுப்பு ஒன்று கட்டப்படும் என்று குறிப்பிட்டார்.

ஃ ஃ ஃ

தனுர் மாதம் 16-12-81 முதற் கொண்டு ஆரம்பமாவதால் 17-12-81 முதல் 14-1-82 வரை, காலையில் திருமலைக் கோயிலில் சுப்ரபாதத்திற்குப் பதிலாக 'திருப்பாவை' பாடப்பெறும். இதுபோது ரூ. 25/-க்கு விற்கப்படும் சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட்டுகள் அனுமதிக்கப்படமாட்டாது.

"அன்னமாச்சார்யா ஓர் அறிமுகம்" எனும் நூலின் விலை ரூ. 1/- ஆகும்.



# ராசிபலன்

(1-12-81 முதல் 31-12-81 வரை)

Dr. டி. அர்க்கசோமயாஜி, M.A., Phd.
திருப்பதி.

## மேஷம்

(அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

பண வரவு, முயற்சிகளில் வெற்றி, கேளிக்கைகளில் ஈடுபடல். எனினும் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாக லாம். மாதத்தின் இரண்டாம் பகுதி யைவிட முதல் பகுதி சுமாராக விளங் கினாலும், இம்முதல் பகுதியின் போது சிறிது உடல்நலம் கெடல், மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை;

நல்ல நாட்கள்

*அஸ்வினி: 2, 4, 8, 19, 24, 29, 31.*

*பரணி: 1, 3, 8, 12-ம் தேதி முற் பகல், 20, 28, 30;*

*கிருத்திகை முதல் பாதம்: 2, 4, 8, 19, 20, 29, 31.*

## விருஷபம்

(கிருத்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சிரிஷம் 2-ம் பாதம் முடிய)

சத் காரியங்களில் ஈடுடல், பிள்ளை கள் அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைகளுக்குள்ளாதல். பண வர வாயினும், மனயமைதியிருக்காது. அவ்வப்போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவு களினால் அவதியுறல். சில கருத்து வேறுபாடுகள் இருப்பினும் 13-ம் தேதிக்குப் பிறகு அவை அடங்கி விடும். 15-ம் தேதிக்குப் பிறகு சிறிது உடல்நலம் கெடல், மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை.

நல்ல நாட்கள்

*கிருத்திகை 2, 3, 4 பாதங்கள்: 4, 6, 10-ம் தேதி பிற்பகல் 11-ம் தேதி முற்பகல் 14, 21, 24, 31.*

*ரோகிணி: 3, 7, 22-ம் தேதி பிற் பகல், 23-ம் தேதி முற்பகல்.*

*மிருக சீர்ஷம் 1, 2 பாதங்கள்: 4, 6, 14, 21, 23-ம் தேதி பிற்பகல் 24-ம் தேதி முற்பகல், 31.*

## மிதுனம்

(மிருக சிரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

பண வரவாயினும், அதிக செல வினங்கள். மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உற்றார் உறவின ருடன் பிரிவு, நண்பர்கள் விரோதம், வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல், கூடா நட்புறவுகள், முயற்சிகளில் வெற்றி. மாதத்தின் இரண்டாம் பகுதியின் போது புதிய ஆடை ஆபரணங்கள், பிரயாணம் அல்லது கருத்து வேறுபாடுகள்.

நல்ல நாட்கள்

*மிருக சீர்ஷம் 3, 4 பாதங்கள்: 6, 8, 12-ம் தேதி பிற்பகல் 18-ம் தேதி முற்பகல் 24, 26.*

*திருவாதிரை: 7, 13, 16.*

*புனர்வசு 1, 2, 3 பாதங்கள்: 6, 8, 12, 16, 26.*

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

பண வரவாயினும், அதில் ஒரு பகுதி தவறான வழியில் பெறல் அல் லது பிள்ளைகள் மூலம் பெறல். உடல் நலமேன்மை, புதிய ஆடை ஆபரணங் கள், பணியாட்கள், வாகன வாய்ப்பு, உறவினர்களால் அல்லது பெண் களால் அல்லது தீய எண்ணங்கொண் டோரால் துன்பங்கள் ஏற்படல். மாதத்தில் முதல் 15 நாட்களின் போது சிறிது உடல்நலம் கெடல் அல்லது மனைவிக்கு மன மகிழ்ச்சி யின்மை. சத்காரியங்களில் ஈடுபடல் மற்றும் அவ்வப்போது பிரயாணம்.

நல்ல நாட்கள்

*புனர்வசு 4-ம் பாதம்: 1, 8, 10-ம் தேதி முற்பகல் 11-ம் தேதி பிற்பகல் 18-ம் தேதி பிற்பகல், 20-ம் தேதி முற்பகல் 26, 28;*

*பூசம்: 2, 10-ம் தேதி பிற்பகல் 11-ம் தேதி முற்பகல் 14, 19, 29.*

*ஆயில்யம்: 1, 8, 11-ம் தேதி பிற் பகல் 12-ம் தேதி முற்பகல் 14, 18-ம் தேதி பிற்பகல் 26. 28, 30-ம் தேதி முற்பகல்.*

## ஸிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

கருத்து வேறுபாடுகளும், எதிரி களும் கொண்டு விளங்குவர். பண வரவாயினும், அதிக செலவினங் கள்; சிறிது உடல்நலம் கெடல். வீட்டில் திருடு போதல். ஏதாவது ஒரு காரணத்தால் கவலைகளுக்குள் ளாதல்.

நல்ல நட்ாகள்

*மகம் : 1, 3, 11-ம் தேதி முற் பகல் 17, 21, 22-ம் தேதி முற்பகல் 29.*

*பூரம் : 1, 3, 11-ம் தேதி பிற் பகல் 12-ம் தேதி முற்பகல் 13, 17, 22, 28, 30.*

*உத்திரம் 1 பாதம்: 2, 4, 10-ம் தேதி பிற்பகல் 11-ம் தேதி முற்பகல் 12-ம் தேதி பிற்பகல் 16, 21-ம் தேதி பிற்பகல், 22-ம் தேதி முற்பகல் 26, 29.*

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ் தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

பண வரவு, உறவினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக் குள்ளாதல், மாதத்தின் முதல் 15 நாட்கள் நன்றாக அமையும். இரண் டாம் பகுதியின் போது சிறிது உடல் நலம் குறைவு ஏற்படினும், குடும்பத்

தில் மகிழ்ச்சி குன்றுது. உற்ருர் உற வினருடன் பிரிவு ஏற்படலாம் அல்லது பிரயாணமும் உடற் சோர்வு ஏற்படலாம்.

நல்ல நாட்கள்

உத்திரம் 2, 3, 4 பாதங்கள் : 4, 6, 12-ம் தேதி பிற்பகல் 14, 19, 24, 31.

அஸ்தம் : 3, 7, 11-ம் தேதி பிற்பகல், 12-ம் தேதி முற்பகல் 13, 20-ம் தேதி முற்பகல் 30-ம் தேதி பிற்பகல்.

சித்திரை 1, 2 பாதங்கள்: 4, 6, 12, 14, 19, 24, 31.

## துலா

(சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

நல்ல நண்பர்கள் ஏற்படினும், சில கருத்து வேறுபாடுகளுக்குள்ளாவதால் கவலைக்குள்ளாதல். மாதத்தின் முதல் 15 நாட்களின் போது ஏமாற்றப்படல், அல்லது கண் சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினுல் அவதியுறல், மாதத்தின் இரண்டாம் பகுதியின் போது பணவரவு, முயற்சிகளில் வெற்றி. தீய நடவடிக்கைகளில் பங்கேற்றலும் நிகழலாம்.

நல்ல நாட்கள்

சித்திரை: 3,4 பாதங்கள், 6,8,14, 16,21,26

ஸ்வாதி : 7,16,22,27

விசாகம் : 1,2,3 பாதங்கள் : 6,8, 14,16,21,26.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் அனுஷம், கேட்டை முடிய)

பணவரவு, முயற்சிகளில் வெற்றி. பிரயாணம், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினுல் அவதியுறல்: தவருன ஆசோசனைகளைக் கேட்பதைத் தவிர்த்தல் நலம் பயக்கும். மாதத்தின் இரண்டாம் பகுதியின் போது ஏமாற்றப்படல் அல்லது கண்சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல். மதிப்புயர்தல், புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல், தீய நடவடிக்கைகளில் பங்கேற்க நேரிடலாம்.

நல்ல நாட்கள்

விசாகம் 4-ம் பாதம்: 8,11-ம் தேதி பிற்பகல், 16,18,20-ம் தேதி முற்பகல், 24,28.

அனுஷம்: 2,10-ம் தேதி பிற்பகல் 11-ம் தேதி முற்பகல், 17,23-ம் தேதி முற்பகல், 29.

கேட்டை: 2,8,10-ம் தேதி முற்பகல், 16,18,20-ம் தேதி முற்பகல், 24,26,28,30-ம் தேதி முற்பகல்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

பணவரவு, தவருன ஆலோசனைகளைக் கேட்பதைத் தவிர்த்தல் நலம் பயக்கும். மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது பிரயாணம், வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினுல் சிறிது அவதியுறல். அலுவலகத்தில் மதிப்புயர்தல். கருத்துவேறுபாடுகள் இருப்பினும், முயற்சிகளில் வெற்றி உண்டு. சிறிதளவு மனக்கவலைகள் மற்றும் சிறிதளவு உடற் சோர்வுக்குள்ளாதல்.

நல்ல நாட்கள்

மூலம் : 4, 10-ம் தேதி பிற்பகல் 19,21,27,31.

பூராடம் : 3,5,10-ம் தேதி பிற்பகல், 11-ம் தேதி முற்பகல், 14,20, 22-ம் தேதி பிற்பகல், 26, 30-ம் தேதி பிற்பகல்.

உத்திராடம் 1 பாதம் : 4,10-ம் தேதி பிற்பகல், 11-ம் தேதி முற்பகல், 12-ம் தேதி பிற்பகல், 19,21, 26,31.

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

கேளிக்கைகளில் ஈடுபடல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பணவரவு, வெற்றி. எனினும் தீய நடவடிக்கைகளில் ஈடுபடல். அதிக செலவினங்கள்.

நல்ல நாட்கள்

உத்திராடம்: 2,3,4 பாதங்கள்: 2,6,12-ம் தேதி பிற்பகல், 14,19, 23-ம் தேதி பிற்பகல், 24-ம் தேதி முற்பகல், 29.

திருவோணம்: 1,7,12-ம் தேதி முற்பகல், 13,20,23-ம் தேதி முற்பகல், 28.

அவிட்டம் : 1,2 பாதங்கள் 1,2, 6,12-ம் தேதி பிற்பகல், 14,19,21, 24,29.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

உற்ருர் உறவினருடன் பிரிவு. பணவரவாயினும், அதிக செலவினங்கள், முயற்சிகளில் வெற்றி. புதிய ஆடை, ஆபரணங்கள், தானியவகைகள் கிடைக்கப் பெறல், உடம்பில் காயம் ஏற்படல், சத் காரியங்களில் பங்கேற்றல்.

நல்ல நாட்கள்

அவிட்டம் 3, 4 பாதங்கள்: 4,8, 14,24,26,28,31.

சதையம்: 5-ம் தேதி முற்பகல், 17, 23-ம் தேதி முற்பகல், 27.

பூரட்டாதி: 1, 2, 3 பாதங்கள்: 4,8,14,16,24,26,31.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் உத்திரட்டாதி, ரேவதி முடிய)

பிரயாணம் அமையலாம். மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை, வயிறு அல்லது கண் சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினுல் அவதியுறல். பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல், முயற்சிகளில் வெற்றி. மாதத்தின் இறுதி 15 நாட்கள், முதல் 15 நாட்களை விட நன்ருக அமையும்.

நல்ல நாட்கள்

பூரட்டாதி 4-ம் பாதம் : 1,6,10, 11-ம் தேதி பிற்பகல், 16,18,20-ம் தேதி முற்பகல், 26,28,30-ம் தேதி முற்பகல்.

உத்திரட்டாதி: 2,7,10-ம் தேதி தேதி பிற்பகல், 11-ம் தேதி முற்பகல் 17,19,27,20,

ரேவதி: 1,6,10-ம் தேதி முற்பகல், 11-ம் தேதி பிற்பகல், 16,18, 20,26,28,30-ம் தேதி முற்பகல்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

| உத்ஸவ கட்டணங்கள் | | | ஸேவைகள் | | |
|---|---|---|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ரூ. | 3000/- | அமந்த்ரணோத்ஸவம் | ரூ. | 400/- |
| பிரம்மோத்ஸவம் | ரூ. | 750/- | பூராபிஷேகம் | ரூ. | 500/- |
| கல்யாணோத்ஸவம் | ரூ. | 2000/- | ஸகஸ்ரகலஸாபிஷேகம் | ரூ. | 3500/- |
| ஊஞ்சல் சேவை | ரூ. | 1500/- | *திருப்பாவாடை | ரூ. | 6000/- |
| தெப்போத்ஸவம் | ரூ. | 2500/- | கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ரூ. | 3000/- |
| வேத ஆசீர்வசன சேவை | ரூ. | 250/- | ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. | 2000/- |
| | | | பவித்ரோற்சவம் | ரூ. | 2500/- |
| | | | புஷ்ப யாகம் | ரூ. | 5000/- |

நித்ய சேவைகள் (ஆண்டொன்றுக்கு)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நித்ய கற்பூர ஹாரத்தி | ரூ. | 150/- | நிரந்தர கற்பூர ஹாரத்தி | ரூ. | 3000/- |
| நித்ய நவநீத ஹாரத்தி | ரூ. | 400/- | நிரந்தர நவநீத ஹாரத்தி | ரூ. | 8000/- |
| நித்ய அர்ச்சனை | ரூ. | 200/- | நிரந்தர நித்ய அர்ச்சனை | ரூ. | 4000/- |

மேற்படி ஆர்ஜித ஸேவைகளுக்குரிய குறிப்பிட்டத்தொகைக்கான D. D. ஒன்றினை 'The Executive Officer, T. T. D. Tirupati' எனும் பெயரில், எந்த வங்கி மூலமாகவாவது பெற்று, அதனை தேவையான தகவல்களுடன் (ஆங்கிலத்தில்) The Peishkar, T. T. D. Tirumala எனும் முகவரிக்கு 15 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும்.

*இச்சேவை செய்பவர்களுக்கு 5 கிராம் எடையுள்ள தங்க டாலர் ஒன்று வழங்கப்படும்.

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலும், திருப்பதியிலும் தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச தங்கு வசதிகள் தவிர்த்து, குறைந்த வாடகை கட்டணங்களில் குறைந்தபட்ச வசதிகளுடன் கூடியது முதல் குளிர்ச்சாதன வசதிகளுடன் கூடிய காட்டேஜுகளில் யாத்திரிகர்கள் தங்கலாம்.

குறிப்பிட்ட தொகையினை ஒரு வாரத்திற்கு முன்கூட்டியே செலுத்தினால், திருமலையில் அல்லது திருப்பதியில் தங்கு வசதிக்கான ஒதுக்கீடு அளிக்கப்படும். தேவையான தங்குவசதியின் சரியான விவரத்தையும், சரியான முகவரியையும் தங்கள் மனுவில் குறிப்பிட்டு அதனுடன் தொகைக்கான டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டர் ரசீதனை இணைத்தல் வேண்டும். குறிப்பிட்ட தங்குவசதி அளிக்க முடியாதிருப்பின், வேறு தங்கு வசதி அளிக்கப்படும். தொகை பெற்றுக் கொண்ட உடனேயே, ஒதுக்கீடு அட்டை அனுப்பப்படும். தங்கு வசதிக்காகத் திருமலைக்கு வருபவர்கள், இவ் ஒதுக்கீடு அட்டையினை குறிப்பிட்ட விசாரணை அலுவலகத்தில் காட்டல் வேண்டும். இவ் அட்டையினையோ அல்லது மணியாடர் ரசீதனையோ அலலது தொகையினைப் பெற்றுக்கொண்டதற்கான ரசீதனையோ காண்பிக்காவிட்டால். அவர்களுக்கு தங்குவசதி அளிக்கமுடியாது. ஒரு நாள் என்பது காலை 8 மணி முதல் அடுத்த நாள் காலை 8 மணி வரை என்பதாகும். டிமாண்ட் டிராஃபட் அல்லது தொகை பெற்றுக் கொண்டதற்கான ரசீது அல்லது மணியார்டர் ரசீதுடன் கூடிய விண்ணப்பங்கள் யாவும் Reception Officer, T. T. Devasthanams, Tirumala அல்லது Tirupati எனும் முகவரிக்கே அனுப்பப்படல் வேண்டும். டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியாடர் குறிப்பிட்ட Reception Officer எனும் பெயரில்தான் எடுத்தல் அல்லது அனுப்பப்படல் வேண்டும்: செக்குகள் (Cheques) ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி ரூ. 3-00

ஸ்ரீ வேங்கடேஸ்வரா பரப்ரஹ்மணே நம:

# நீ ஓர் இந்து - அதற்காகப் பெருமைப்படு!
# பெருமை வாய்ந்த சரித்திரம் உனக்குள்ளது; அதனை மறவாதே!
# அரும்பெரும் தத்துவக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட பேரியக்கம் இந்து சமயம்

உண்மையான ஓர் இந்துவாக செயற்படு — **கீழ்வருவனவற்றைக் கடைப்பிடி**

✠ உனக்கு விருப்பமான சமயக்குறியை (திலகம், சந்தனப்பொட்டு, விபூதி, நாமம்) நெற்றியில் இட்டுக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்.

✠ தினம் குறைந்தபட்சம் ஒரு முறையாவது ஸ்நானத்திற்குப் பிறகு இறைவனின் நாமத்தை ஜெபிக்கவும்.

**கீழே கொடுக்கப்பட்டுள்ள நாமங்களில் ஒன்றை அல்லது ஒருசிலவற்றையாவது தேர்ந்தெடு**

ஓம் ஸ்ரீ வேங்கடேசாய நம:

ஓம் நமோ பகவதே வாசுதேவாயா

ஓம் நமோ நாராயணாய

நமசிவாயா

ஹரே ராம ஹரே ராம ராமராம ஹரேஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ணகிருஷ்ண ஹரேஹரே

✠ தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதத்தின் குறைந்தபட்சம் 10 ஸ்லோகங்களை பாராயணஞ்செய்.

✠ வாரத்திற்கு ஒரு முறை உன் குடும்பத்தாருடன் உனக்கு விருப்பமான கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடு.

✠ உங்கள் வீட்டிற்கு முன் 'ஓம்கார்' எனும் முத்திரையினை ஒட்டவும்.

✠ தினந்தோறும் பகவத்கீதையில் குறைந்தபட்சம் ஒரு ஸ்லோகத்தையாவது பாரயணஞ் செய்.

✠ சமுதாய சமய விழாக்களில் ஏதாவது ஒருவகையில் பங்கேற்றுக்கொள்.

---

அவனை நம்பு - அவன் உன்னைக் காப்பான்

---

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

ஸ்ரீ வேங்கடேஸ்வரா பரப்ரஹ்மணே நம:

# நீ ஓர் இந்து - அதற்காகப் பெருமைப்படு!
# பெருமை வாய்ந்த சரித்திரம் உனக்குள்ளது; அதனை மறவாதே!
# அரும்பெரும் தத்துவக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட பேரியக்கம் இந்து சமயம்

உண்மையான ஓர் இந்துவாக செயற்படு — கீழ்வருவனவற்றைக் கடைப்பிடி

✠ உனக்கு விருப்பமான சமயக்குறியை (திலகம், சந்தனப்பொட்டு, விபூதி, நாமம்) நெற்றியில் இட்டுக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்.

✠ தினம் குறைந்தபட்சம் ஒரு முறையாவது ஸ்நானத்திற்குப் பிறகு இறைவனின் நாமத்தை ஜெபிக்கவும்.

**கீழே கொடுக்கப்பட்டுள்ள நாமங்களில் ஒன்றை அல்லது ஒருசிலவற்றையாவது தேர்ந்தெடு**

ஓம் ஸ்ரீ வேங்கடேசாய நம:

ஓம் நமோ பகவதே வாசுதேவாயா

ஓம் நமோ நாராயணாய

நமசிவாயா

ஹரே ராம ஹரே ராம ராமராம ஹரேஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ணகிருஷ்ண ஹரேஹரே

✠ தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதத்தின் குறைந்தபட்சம் 10 ஸ்லோகங்களை பாராயணஞ்செய்.

✠ வாரத்திற்கு ஒரு முறை உன் குடும்பத்தாருடன் உனக்கு விருப்பமான கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடு.

✠ உங்கள் வீட்டிற்கு முன் 'ஓம்கார்' எனும் முத்திரையினை ஒட்டவும்.

✠ தினந்தோறும் பகவத்கீதையில் குறைந்தபட்சம் ஒரு ஸ்லோகத்தையாவது பாராயணஞ் செய்.

✠ சமுதாய சமய விழாக்களில் ஏதாவது ஒருவகையில் பங்கேற்றுக்கொள்.

---

**அவனை நம்பு - அவன் உன்னைக் காப்பான்**

---

**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.**